கும அபபால நான வநது உனனைககாணபேன" எனறு கூறி எழுநது சென்றார

11 தாயுமானவா அவருடைய பிரிவைக கணடு மனம வருநதினா அதனை உணாநத மெளனகுரு சும்மாவிரு எனறுகூறிச சென்றா தாயுமானவா அதையே பரம உபதேசமாககொணடாா, அதைப பறறி அடிககடி சிநதிதது வநதாா, குருவை யெணணி எணணி உருககததலைபபடடாா, சுமமாவிரு எனற அநத வாககியததை மெளனகுருவணககததிலே வைததுப பாடிக துதிததாா, அநத உபதேசமொழியை எடுத தெடுதது அடிககடி சொலலி மனததைத தேறறிவந தாா

12. தாயுமானவருடைய இநதப பரிசுததமான நிலையைககணட அரசன, அவரிடம பயபகதி விசுவாசங கொணடான அரணமனை உததியோகஸதரில ஒருவ ரெனபதையே மறநதான தாயுமானவரும லௌகிகவிாத தியை மறநதாா, ஞான நெறியிலே சிறநது நினறாா. அரசன அவாககு வேணடியவை யாவும அளிதது அவா மனமகிழுமபடி பணிசெயயத தலைபபடடான. அபபால ஒருநாள அரசன காலமானான

13 தாயுமானவா, பிறகு அரணமனையிலேயே இருநதுவநதாா அரசனுடைய மனைவி மீனாட்சியமமை எனபவள் தன கணவனுடைய அரசை ஏற்றுககொண டாள. மீனாட்சி நல்ல குலததிலே பிறநதவள் ; கலலவா களோடு பழகியவள; உததம குணம வாயநத அரசனுககு மனைவியானவள இருநதும வினைவசததினால தாயுமான வரினமேல ஆசைகொண்டாள். அவரைப் பார்தது,

“ஸ்வாமி, இநத அரசை உமககே தநதேன என உடல், பொருள, ஆவியும உமமுடையனவே” எனறு பணிந தாள.

14. தாயுமானவா உடனே சிவசிவா எனறு செவி யிலே காம வைததுப பொததிப பின அநத மாதைப பாாதது, “இது சரியான எணணமலல இதைமற. மாதாகளுககுக கறபே சிறநதது அது அவாகளுககு இகபர நனமைகளைத தரும இதனாலேதான, தமிழ வேதம—

> “பெணணிற பெருநதகக யாவுள கறபெனனுந
> திணமை யுணடாகப பெறின”

எனறு போதிததிருககிறது இவறறையெலலாம நீ அறியாயோ? அறிவாய, இருநதும இபபடி மயஙகியது உன வினைபபயனேயனறி வேறலல உலகமாயை எப படிபபடடவரையுமமயககவலலது அதறகிடமகொடாம லிருபபதே அறிவாகும”—என இனனும பல நீதிகளைப போதிதது அநதமாதை ஞானமாாககததில திருபபினா

15. தாயுமானவாககு அதன பின அஙகிருகக மனம இடநதரவிலலை உடனே அவவிடம விடடுப புறபபடடு இராமநாதபுரததிறகுச சமீபததிலேயுளள தேவை எனகிற நகரததுககுச சென்று அஙகேவசிதது வநதாா. இதை அறிநத அவருடைய தமையனா, தமது சிறிய தாயாா புததிரராகிய அருளையபபிளளை யோடு தேவை நகாசெனறு தாயுமானவரைக கணடு, “குலமவிளஙக ஒரு மஙகையை விவாகம செயது கொளளவேணடும” எனறு கடடாயபபடுததினா.

16. தாயுமானவாககு ஸமஸார பநதததிறகடடுப

பட விருப்பமில்லை. ஆயினும தமையனா சொல்லைத் தட்ட அஞ்சி விவாகம செய்து கொளளச சமமதிததார். பிறகு அவாககு விவாகம நடநதது. அபபால அவாக்கு ஒரு புததிரன பிறநதான. அவனுக்குத தாயுமானவா கனகசபாபதி எனறு பெயரிட்டு அருமையாய் வளாதது வநதாா. அபபொழுது அவாக்கு, தாயுமானசுவாமி மலையில முனனே தரிசனந தநது சுமமாவிரு எனறு உபதேசிததுசசெனற மௌன குரு ஸ்வாமிகள அஙகே வநதாா; தாயுமானவரின பககுவ நிலையைக கண்டு மனமகிழநது அவாககு யோக முறையை உபதேசிததுத துறவியாகுமபடி கடடளையிட்டுச சென்றா

17. தாயுமானவா உடனே அனறைககே தமமுடைய மனைவி மைநதன, வீடுவாசல எலலாவறறையும துறநது கௌபீனதாரியாய வெளிபபட்டாா; தமமுடைய அநுபோகஙகளையெலலாம அவவபபோது கேட்போரும படிபபோரும மனமுருகி, எலலாம வலல இறைவன திருவடிககடியராகுமபடியான இனிய தமிழிற் பாடி வருவாரானா.

18. தாயுமானவா பாடிய பாடலகளை யெல்லாம் அவரைவிட்டு அகலாமல பினதொடர்ந்துவந்த மாணவாகள எழுதிவநதாாகள். கடைசியில தாயுமானவா தேவை நகரிலே சமாதியடைந்தார். அவருடைய கோவில் அங்கு இபபொழுதும அடையாளமாக விளஙகுகிறது. தாயுமானவரின காலம சுமாா இருநூறு வருஷஙகளுககு முன இருககலாமெனறு கணக்குச் சொலலுகிறார்கள்.

19. தாயுமானவருடைய பாடல்களைப்போல் பாடல்

இனி எவரும பாடமுடியாதெனறும சொலலலாம. அவ ருடைய பாடல்களால தமிழுலகம எநதக் காலததிலும் சிவஞானப பேறு பெறுமெனபதி லையிலலை. ஆகையி னால தாயுமானவரின பரமோபகாரம எனறும மறக்கத தககதனறு.

20 தாயுமானவா எலலோரும இனபநிலையில் இருககவேணடுமெனகிற உயாநத கருததுடையவர். அதை அவா,

"எல்லோரும இனபுற் றிருகக நினைபபதுவே
அலலாமல வேறொன றறியேன பராபரமே" என்று

பராபரககண்ணியில பாடியிருககிறா. அவா சுதத சை வா, பரமசாநதசொரூபி, பெருஙகருணைத திருவாளா. எலலோாககும இனசொலலால புததிபுகடடுவோா; அறி யாதாருடைய புனசெயலகண்டு இரஙகுவோா; எவரை யும நிநதிதது ஒதுககாா இநத மகானுடைய நலல உப தேச வழி நிற்பவாககு எனறுங குறைவுவராது.

ஆததுமததைச சுததிசெயாா ஆசாரத தால்பயனென
பாததிரத்தைச சுததிசெயாா பாகமெவன—ஏததுறநல
சித்தசுத்தி செயயாா சிவபூசை யாலபயனென்
வித்தமுறு வேமா விளமபு

(வேமன நீதிவெண்பா)

ஆத்துமத்தை—ஆதமாவை, பாகம எவன—சமையலா லென்னபயன்; விததம—ஞானசசெலவம.

# கற்பின் பெருமை

“கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை” என்று ஔவையார் அருளிச் செய்தனர். இதனால் பொய்பேசாமையே கற்பு என்று தெளிவாய்ப் புலப்படுகிறது. கற்புக்குரிய லக்ஷணங்களெல்லாம் பொய்பேசாமையில் அடங்கி விட்டமையால், பொய்பேசாமையே கற்பு என்று சொல்ல ஒரு சிறிதும் தடையில்லை. இது பெண்பாலார்க்கேயன்றி ஆண்பாலார்க்கும் பொருந்தியது. இயற்கையிலேயே பேதைமைக் குணத்தை ஆபரணமாகப் பெற்றுள்ள பெண்மக்களுக்கு எச்சரிப்பு அடிக்கடி வேண்டியிருந்தலின், கற்பு என்பது இத்தன்மையதென்று பல படித்திறங்களில் அதை விஸ்தாரமாக எடுத்துப் பேசி, அக்கற்பைக் காக்கும் விஷயத்தில் அவர்கள் விழிப்பாயிருக்க வேண்டுமென்று வற்புறுத்திவரலாயிற்று.

பெண்கள் தனித்திருப்பதும், சிலசமயங்களில், பேதைமை காரணமாகக் கெடுதியை உண்டுபண்ணக் கூடுமென்னுங் கருத்தால், கூடாதென்பது பெரியோர்களின் துணிபு. அதுபற்றியே அவர்களுக்குக் காவலும் ஏற்படுத்தப்பட்டது. “காவல்தானே பாவையர்க்கழகு” என்று ஔவைப் பெருமாட்டியே கூறியிருக்கிறார். கன்னிகையாயிருக்குங் காலத்தில் அவர்கள் பெற்றோர் வசத்திலும், கலியாண மானபின் கணவர்வசத்திலும், கணவர்க்குப்

பின பிள்ளைகள் வசததிலும, பிள்ளைகள் இல்லாவிட்டால உடனபிறநதார வசததிலும இருககவேண்டும.

கலியாணமான பிறகு அவாகள பெறறோா உறறோா முதலானவரை விட்டுக கணவரையே கதியெனறடுதது அவாசொலலுககு எதிாபேசாமல கீழபபடிநது பகதி விசு யததோடு நடநது வரவேணடும எநதபபணி (வேலை)யால தமது கணவா இனபுறுவாாகளோ அநதபபணியை உட னுககுடன பணிவோடு செயது அவாகளைச சநதோஷப படுததி வருவதையே தமமுடைய முககிய கடமையாகக கொளள வேணடும ஊசியும சரடுமபோலிருநது உதவி புரிநது வரவேணடும அசசம, நாணம, மடம, பயிாபபு எனகிற நானகு குணஙகளிலிருநதும ஒருபோதும வழுவு தலகூடாது அசசமாவது எனறும காணாததைக கணட விடததுப பயபபடுதல, நாணம எனபது வெடகங கொணடிருததல, மடமாவது சகலமும அறிநதவிடத தும அறியாதது போல அடஙகியிருததல, பயிாபபு— கணவரலலாதா ருடைய கை மேறபடின உடமபு அரு வருபபடைதல—

கணவா பூசையி லிருககுமபோது அவரைக குரு வாகப பாவிதது அநதப்பூசைககு வேண்டிய வறறைத தாம சிஷயாயிருநது நடததவேணடும, சநதோஷமாயி ருககுஙகாலததில அவரை மனமதனைக நினைததுத தாம ரதியாயிருநது ஒழுகவேணடும, மறறகாலஙகளில அவ ரைத தெயவமாக எண்ணி அவருடைய சேஷததை அமு தாக உணடு நதியாடல, விரதமிருததல,தேவதா தரிசனஞ செயதல முதலிய சகலகிரியைகளையும அவருடைய பாத தரிசனத்துக்குச சமமெனறு அனுசரிதது வரவேண்டும.

சுததிபததியுடன,கடலின ஆழததைப் பாரததுவா எனறு கணவா கனவில சொனன போதிலும உடனே சென்று செய்யும படியான மனோதிடததைக கொளளவேண்டும. விருநதோமபல, சுறறநதழுவல, மககளைப பாதுகாததல் முதலிய குடும்பவிவகாரஙகளையுமமனததளா வடையாமல் கவனிக்க வலல உததமியராயிருகக வேண்டும. இவாகளே கறபுக கரசியராவாாகள. அததகையோா செய்யும தருமங் களே மழைவளததுககும உலகக்ஷேமததுககும ஆதார மாகும—

" . ... . . . ...... மாதாா
அற்பில நினறன அறஙகள அனனவா
கற்பில நினறன காலமாாியே "

எனபது சததிய வாககல்லவா ?

இவவாறு நடநது வநதவரும வருபவருமான ஸ்திர ரதனஙகள இருபபதாலனறோ நலலா ரொருவா உளரேல அவா பொருட்டு எலலாாககும பெய்யும மழை எனகிற படி பூமியானது நாளது பரியநதம கூடியவரையில ஒழுங கான நிலையில இருநது வருகிறது. அநதப பதிவிரதா சிரோமணிகளின பெருமையைபபேச யாவரால ஆகும ?

" முககணாதணடலை நாட்டில கறபுடையோா பெரு மைமொழிந திடிலொருததி, ஒககுமெரி குளிரவைத தாள ஒருததிவில வேடனை யெரிததாள் ஒருததிமூவா, பககமுற அமுதளிததாள ஒருததி எழுபரியவனை இணங் கவைததாள், கொககெனவே நினைததனையோ கொங் கணவா எனறொருததி கூறினளே.—

---

எரி—அக்கினி; அமுது —பால்; எழுபரியவன்-சூரியன் (ஏழுகுதிரை பூட்டிய ரதத்தை யுடையவன்)—

எனனும பாடலானது அப்பதி விரதைகளின பெருமையை விளககுகினறது.—

இபபாடலினபடி அக்கினியைக் குளிரவைததவள் சநதிரமதி, வேடனை எரிததவள் தமயநதி, மும்மூாததிகளைக குழநதைகளாககிப பால கொடுததவள அநசூயை, சூரியனை உதயமாகா மலிருககுமபடி வேண்டியவள நளாயனி, கொககெனறு நினைததனையோ எனறு கேடடவள் வாசுகி.

இபபடிபபடட அறபுதஙகளைக காடடிய பெண்மணிகள இனனும அநேகருண்டு—

கறபின பெருமை இவவாறிருபபதால நமது பெணமணிகள இதைக கவனிததுத தாஙகளும இவவணணம பெருமை யடையும வழியில நடகக முயறசி செய்வாா களாக கணவா சொறபடி நடபபதே அவாகள அனுசரிகக வேணடிய முயறசியாம.—

இதுசமபநதமாகப பதமாவதி எனனும ஜெயதேவாது பாாியாளின சரிதததை அடுதத சஞசிகையில வெளியிடுவாம—

ம. இராஜ கோபால பிள்ளை,
விதவான, கோமளேசுவரன பேடடை, சென்னை.

பிறா குறறஙகளைப பாராட்டாதே!
பிறா பெருமையைமாததிரம பேசு
உன்னைபபோலவே பிறரையும எண்
உததமனுயிரு

# பெண்புத்தி கேட்ட பீமன்

ஒரு வித்துவான் ஓர் அரசனிடம் போய் அவன் புகழைப் பாடினான். அரசன் விலையுயர்ந்த மாணிக்கம் ஒன்றை வித்துவானுக்குத் தந்தான். அதை அரசனுடைய அரண்மனை வேலைக்காரி பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் தன் வீட்டிற்குப் போனதும் தன் புருஷன் பீமனை அழைத்து, "எத்தனை நாள் இப்படி தரித்திரத்திலே கஷ்டப்படுகிறது? இதைப் பற்றி உங்களுக்குக் கவலையே கிடையாது. நான் எத்தனை நாள் உழைத்துச் சாவது? இந்த நம்முடைய தரித்திரம் தீர வேண்டுமானால் நீங்கள் நானின்று சொல்லுகிறபடி நடக்கவேண்டும்" என்றாள்.

பீமன் பேரளவில் பீமனே தவிர பலத்தில் பீமனல்ல, பலஹீனன், சாது, நல்ல புத்தியுடையவன். அவனுக்குக் கொஞ்சம் நிலமிருக்கிறது. அதில் உழுது பயிர் செய்து அவன் ஜீவித்து வந்தான். குடும்பத்துக்கு அதில் வரும் வரும்படி கட்டவில்லை. அதனாலே கஷ்டம். பீமனுக்குப் பயிர்த்தொழில் தவிர வேறு தொழில் தெரியாது. பீமனுடைய மனைவி நல்ல சாமர்த்தியக்காரி, எட்டு ஊரை விலைக்கு வாங்குவாள், ஆகையினால் அவன் அவளுக்கு அடங்கியவனானான்.

அவள் "இன்று நான் சொல்லுகிறபடி நடக்க

வேணடும" எனறவுடன பீமன "அதெனன அபபடிச சொலலுகிறுய்' எனறைககு உன பேசசை நான தட்டினேன, இனறைககுத தட்ட? மகாராஜியை எனறைககுத தொட்டுத தாலிகட்டினேனே அனறைககே அவிட்டததுத தாஸனுயவிட்டேனே இனனுமெனன?" எனருன

அவள "இநதக குறுமபுப பேசசுப பேசததெரியுமே ஒழிய காரியததில ஒனறையுநகாணேம இருககட்டும—நான சொலலுகிறபடி நட—கேள—அரணமனைககு இனறு ஒரு விததுவான வநதிருநதான. அவனுககு மகாராஜா ஒரு மாணிககம தநதார அதை நான என கணணுலே பாரததேன அநத விததுவான இப்பொழுது அரணமனையிலிருநது புறப்பட்டுப்போகிருன ஓடிப்போய் அவனை வழியில மடககிககொணடு அநத மாணிககததைப பிடுஙகிவா' நமது தரிததிரம அதமாயவிடும தரிததிரததை ஒழிகக இதைத தவிர வேறு வழியிலலை" எனருள

பீமன, இதைக கேட்ட நம ஆநதைபோல விழிததான, "அநதோ நான பிழைததத பிழைப்பு வழிப்பறி செயயும படியாய முடிநததே" எனறு எணணி ஆலோசிததான அவன மனைவி, "எனன ஆநதையாய விழிககிருய? அவலமே, தொலை சீககிரம" எனருள பீமன, "அநதோ தரிததிரமே, உனனுடைய ஆககையாவிது?" எனறு எழுநது விரைவாயப்போய விததுவானை ஒரு காட்டில மடககிககொணடான.

பகல வேளையாயிருநதாலும அது ஊருககுப புறமபான காடானபடியால அஙகே ஜனசஞசாரமிலலாமலிருக

தது. விததுவான அநத வழியில பயநதுகொண்டே தான போகிறுன. மடியிலே கனமிருக்கிறதல்லவா ? பீமன அவனை மடககியதும் விததுவான திடுககிட்டு நின றுன. பீமன அவனைப பாரதது, "நீ இபபொழுது அரண மனையிலே வெகுமதியாகப பெற்ற மாணிககததைதக கொடுததுவிடு இல்லாவிட்டால உனனை விடமாட டேன" என்றுன

விததுவான, உடனே தன மடியில வைததிருநத மாணிககததை யெடுதது வாயிலபோட்டு மடககென்று விழுஙகிவிட்டான பீமன, "உனனை இபபொழுது குமமாங குததுக குததி மாணிககததைதக ககக வைபபேன. நீயே ககிவிடு அதை" என்றுன. இதை அருகி லிருநத வேடன கேட்டு ஓடிவநது, "மாணிககததை கொடுககிறீர்களா இல்லாவிட்டால இநத என கை ஈட் டிககு உஙகளை இரையாககி அதையெடுததுக கொள ளட்டுமா !" என்று கேட்டான.

விததுவான சிவசிவா என்று சொலலிககொண்டு பகவானை நினைததபடி நின்றுவிட்டான. பீமன, "ஐயோ, நாம விததுவானைக காட்டிக கொடுககவேண்டும. காட் டிக கொடுததால அவன வயிற்றிலுள்ள மாணிககததைதக கைபபற்றுவதற்காக வேடன அவனைக கொல்வான? விததுவான நமமாலிறபபானே தவிர நமககு ஒரு பயனு மில்லை. ஆதலால இதறகு ஒரு யுகதி செயகிறேன" என்று எண்ணிககொண்டு வேடனைபபாரதது, சிறு நகை நகைதது, "நாஙகளிருவரும மாமன மைததுனா. அத ஞல வேடிககையாகப பேசிககொண்டோம. அதைக கேட்டுககொண்டு நீ வநது விட்டாயே" என்றுன.

அவன சொன்னது உண்மையென்று மனதிற்பட்டது. அது விததுவானைப் பிடிதத நல்ல வேலைதான்; உடனே வேடன நகைதது, வழியில மாமன மைத்துனன் இபபடி விளையாட்டுக்குப பேசிககொள்வது கூடாது எனபதை உஙகளுககு அறிவிக்க எண்ணிததான நான வநதேன, தெரிநததா? இனி இபபடிபபட்ட பரிகாசம உதவாது" எனறு சொலலித தான அபகரிகக வநததை யுகதியாய் மறைததுப பேசித தன வேலையைக கவனிக்கப போய்விட்டான

அவன போனதும பீமனுககு நலல புததி வநதுவிட்டது.—சை—திருட்டுப பிழைபபு ஒருபிழைப்பா? நானொரு மடையன. பெணபுததியினால இதறகுத துணிநதேன. எனனபுததி எனபுததி'' எனறு எணணி விததுவானிடம தனமனைவியின குணததையும தனவறுமையையும கூறிபபணிநதான.

விததுவான அவனமீது இரககஙகொணடு, "இருககட்டும; நீ கவலைபபடாதே' நீமனித இயலபுக கேற்றதே செய்தாய்; உனமனைவியும தவறு செயதாளிலலை உனககு; நலல காலததால எனனையுங காததாய்; உனனையும காததுக கொணடாய். அபபனே, நீ சொனனபடி நாமிருவரும, இனறுமுதல மாமன மைததுனனுகவே இருபபோம. வாழ்வில தாழ்வில இருவரும ஒததுப போவோம. ஒனறு கேள' நானொரு கவி சொலலிக கொடுககிறேன. அதை உஙகளூா அரசனைத தவிர வேறு எநத அரசனிடமாவது போய்ப பாடு. அநத அரசன உனனை விததுவானென மதிதது வெகுமதியளிப்பான. அதைப பெறறுக்கொண்டு சுகமாயிரு' எனறுன.

பீமன அவனைப்பணிநது, "வித்துவானுடைய மைத்துனன விததுவானுனை" என்று பதிற்சொலலி விததுவானை மகிழ்வித்தான. விததுவான உடனே ஒரு பாட்டுபபாடி அதைஅவனுக்குச சொலலிக் கொடுததான. பீமன புததிசாலியானதால உடனே கிரகிததுககொண்டு விததுவானைப பாரதது, "மாமா போய வாருஙகள" என்று கூறிப பணிநது விடைகொடுததான. விதது வானும, "மைததுனு, சேஷமமாயிரு" என்று ஆசீர வதிததுச சென்றுன.

பிறகு பீமன அநதககவியை வேநதனெருவன சமு கததில பாடினுன. அதைககேட்டு வேநதன சநதோஷ மடைநது பீமனுககுத தககு வெகுமதி தநதான. வெகு மதிபெறறதும பீமன, "ஓகோ, கலவிககுளள மகிமை எதறகும கிடையாது. தெரியாமலா கைபபொருள தன்னில் மெய்ப்பொருள் கலவி என்று கூறியிருககிறுாகள்" என்று கலவியின பெருமை யுணாநது அனறுமுதல தினம கொஞசமேனும ஏதாவது படிநதுத தெரிநது கொளவ தெனகிற பிரதிகஞை வைததுக கொண்டான; மனைவி யிடம கொணடுபோய்த தான பெறற வெகுமதியைத தநது, நடநதவைகளை யெலலாம அவளுககுச சொலலி அவளையும திருததினுன. ஆனுல அவளுககுப் புருஷனை அடக்கியாண்டு வநத பொலலாத குணமட்டும போக விலலை. நெடுநாட் பழக்கமல்லவா? பழககம கொடிதன றோ? தெரியாமலா தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் என்று சொல்லுகிறுாகள பெரியோாகள ?

# கிறிஸ்துவ மார்க்கம்

கானான் தேசத்தில் ஒருசமயம் பஞ்சமுண்டாயிற்று. அத்தேசத்தைச் சார்ந்த பெத்லெகேம் என்னும் ஊரில் வசித்த எலிமெலேக்கு என்பவனும் அவன் பெண்சாதி நாகோமி என்பவளும் தங்களுடைய இரண்டு பிள்ளைகளுடன் மோவாப் தேசம்போய் வாசம் பண்ணினார்கள். அங்கே அவர்களுடைய குமாரர்களிருவருக்கும் விவாகமாயிற்று. மணந்த பெண்களில் ஒருத்தியின் பெயர் ஓர்பாள், இன்னொருத்தியின் பெயர் ரூத்.

அப்பால் அவர்களில் எலிமெலேக்கும் அவன் குமாரர்களும் இறந்து போனார்கள். நாகோமி விதவையாய் விட்டபடியால் தன் தேசத்துக்குப்போக யத்தனித்தாள். அப்பொழுது அவள் தன் மருமக்களைப் பார்த்து, "நீங்கள் உங்கள் பெற்றோர்களிடம் போய்ச் சுகமாயிருங்கள்" என்றாள். ஓர்பாள் என்பவள் மாமியை முத்தஞ்செய்து விட்டுத் தன் தாய் தந்தையரிடம் போனாள். ரூத் அப்படிச் செய்யவில்லை. அவள் நாகோமியின் கழுத்தைக் கட்டிக் கொண்டு, "நான் உம்மைவிட்டு விலகேன்! நீர்போகிற இடத்துக்கு நானும் வருவேன் உம்முடைய ஜனம் என்னுடைய ஜனம் உம்முடைய தேவன் என்னுடைய தேவன்" என்று சொன்னாள்.

நாகோமி அவளிடம் சந்தோஷங் கொண்டு தன்னோடு அவளைப் பெத்லெகேமுக்கு அழைத்துப் போனாள். ரூத்தின் இந்த அருமையான குணங்கண்டு எல்லோரும் சந்தோஷமடைந்தார்கள். கர்த்தர் அவள் மீது இரக்கங்கொண்டு ஆதரித்தார்.

கணவனுடைய உறவும் ஊருமே ஒருகுலஸ்திரீக்கு அவளுடைய உறவும் ஊரும் ஆகுமல்லது தாய்வீட்டு உறவும் ஊரும் அவளுடையவை ஆகா!—இந்தப்பரம இரகஸ்யத்தை இக்கதை விளக்குகின்றமையினால் குலஸ்திரீகள் எந்தக்காலத்திலும் எந்தநிலைமையிலும் கணவனுடைய வம்சத்தையே பற்றி நிற்கவேண்டுமென்றறிக.

## (7) ஸ்ரீ ராமாவதாரம்

(74-ம் பக்கத் தொடர்ச்சி)

பிறகு விசுவாமித்திரர் இராஜ புத்திரர்களைத் தாம் யாகம் புரிவதற்குரிய இடத்தை நோக்கி அழைத்துக் கொண்டு போயினர். இரண்டு காத தூரம் சென்றதும் வழியில் 'ஓ' வென்கிற பெருஞ்சத்த மொன்று அவர்கள் செவியிலே பட்டது. ஸ்ரீராமபிரான் அச்சத்தம் யாதென்று முனிவரை வினவினன். கோசிகர் "ஸ்ரீராமா! இங்கொரு நதியோடுகின்றது, அது மிகவும் பரிசுத்தம் வாய்ந்தது. தன்னிற் படிவோரது பாவங்களனைத்தையும் தீயிலிட்ட பஞ்சுபோலே போக்கிச் சுகப்பேற்றைத் தர வல்லது. கோமதி யென்னும் பெயரையுடையது. அப் புனித நதி சரயுவென்னும் மகாநதியுடன் வந்து சங்கமமாகும் இடம் இதுவாதலால், இங்கு இச்சத்தம் உண்டாகின்றது" என்றார்.

தசரத தநயன் ஆச்சரியமுற்றுக் "கோமதி யென்னும் புண்ணிய நதியின் வரலாறு யாது" என்று முனிவர்பிரானைக் கேட்க, அவர் சொல்லுவாராயினர்.

பிரமதேவனது மானஸ புத்திரராகிய குசனென்னும் மகாராஜனுக்கு, குசன் குசநாபர் முதலிய நான்கு பிள்ளைகள் பிறந்தனர். குசநாபர் வயதடைந்து மணவினை

பெற்றபின் நூறு பெண்மணிகளை யீன்றெடுத்தார். இப்பெண்ணரசியரின் சௌந்தரியத்தைக் கண்ட வாயுபகவான் அவர்களிடஞ் சென்று, தம்மை மணந்து கொள்ளும்படி வேண்டிக் கொண்டார். அவர்கள், தங்கள் தந்தையுத்தரவின்றி அது முடியாதென்று பதிலளித்தார்கள். அதனால் கோபங் கொண்ட வாயுதேவன் அவர்களைக் கூனியராக்கித் தமது லோகஞ் சார்ந்தார்.

இதைக் கேள்வியுற்ற குசநாபர் உடனே தமது புத்திரிகள் நூறுபேரையும் பிரமதத்தன் என்னும் தவச்செல்வருக்கு மணம்புரிவித்தார் பிரமதத்தருடைய கைப்பரிசம் பட்டமாத்திரத்தில் அப்பெண்கள் யாவரும் கூன் நிமிர்ந்து முன்னிலும் அதிக அழகை அடைந்தனர். நெடுங்காலம் தமக்குப் புத்திரபாக்கியம் கிடையாமையால் பிரமதத்தர் தவஞ்செய்யலுற்றார் அந்தத் தவத்தின் பயனாக அவருக்குக் காதியென்பவர் பிறந்தார் இவரிடம் இராஜ்யபாரத்தை ஒப்புவித்துப் பிரமதத்தர் சுவர்க்கலோகஞ் சென்றார் அந்தக் காதியென்பவருக்கு முதல் முதல் யானும் கவுஸிகை என்னும் எனது சகோதரியும் பிறந்தோம் கவுஸிகை இருசிகரென்பவருக்கு வாழ்க்கைத்துணையானாள் இருசிகர் சிலகாலம் அரசாண்டு பிரமலோகம் போயினர் போகும்போது கவுஸிகை யென்பவள் நதிரூபமாக மேலநோக்கிச் சென்று "தன்னைத் தனியேவிட்டுப் பிரிவது தகுமோ?" என்று தன் கணவரைக் கேட்க 'நீ நதிவடிவாகப் பூதலத்திலிருந்து உன்னிற் படிபவருக்கு இகபர பேற்றை யுதவிப் பெருமையடைந்து வாக்கடவாய்" என்று கட்டளையிட்டு நீங்கினார். அக்கவுஸிகையே இங்கு நதியாக ஓடுகின்றாள்.

அநதநதி சாயுவுடன இஙகு கூடுகினறது" எனறு கோசி கா கூறினா.

அநநதரம சிறிது தூரம மூவரும போனதும ஓரழ கிய சோலையைக கணணுறறனா. அசசோலையின பிரபா வததையும தெரிவித தருளவேணடு மெனறு, முனிவா பெருமானைத தாசரதி கேட்டனன.

முனிவா "ஸ்ரீராமா! இநத இடம மிகவும மகத துவம பொருநதியது முனனொரு காலததில, "எஙகள நானமறைககுந தேவ ரறிவிறகும பிறாககு மெட்டாச, செஙகண மால இருநது" தவவொழுககததை நடததிக காட்டிய இடம இதுவே அபபோது மகாபலி யென னுஞ சககரவாததி அரசு செயதுவநதான. தேவாகளிஷ வேணடுகோளுக கிசைநது பகவான வாமன ரூபியாய அவனை யாடகொணடருளினா" எனறு சொலலிக கொணடே இராமலட்சுமணாகளைத தமது யாகசாலைககு அழைததுக கொணடுபோனா.

அஙகு மகரிஷியான விசுவாமிததிரா செயயப புகு நத யாகததைத தசரததநய ரிருவரும கண்ணை இமைகாப பது போலக காததருளினா. யாகம இடையூறினறி முடிவு பெறறதும கௌசிகா அவ்விருவரையும ஜனகம காராஜன செய்யும வேள்வியைககாண மிதிலாபுரிககு அழைததுக கொண்டேகினா.

வழியில ஸ்ரீராம பிரானுடைய திருவடித தூகளின பரிசததால ஒரு கருஙகற்பாறையானது பெண்வடிவம பெற்று நினறது. அதைககண்ட மகரிஷி ஸ்ரீ ரகுநாய கனை அனபுடன நோக்கி,

"*** இனி இநத உலகுககெல்லாம
உய வண்ணமன்றி மற்றோதுயர் வண்ணமுறுவதண்டோ
மைவண்ணததரககிபோரில மழைவண்ணததண்ணலேயுன்
கையவண்ணம அங்குகண்டேன், கால்வண்ணம் இஙகுகண்
[டேன்"

என்று புகழ்நதனா.

பிறகு "ஸ்ரீராமா! இவ்வுததமிதான அகலிகை எனபவள, 'கௌதம ரிஷியின பததினி; தனககுரிய தரு மததினின்றும சிறிது வழுவிய காரணததால கலலாயி னள. உனது திருவடிப பரிசததால பழையவடிவததை யடைநதாள" என்று கூறி அததேவியைக கௌதமா வசம ஒபபுவிதது மூவரும மிதிலையை யடைநதனா

இவாகளைக கணட மிதிலா புரியானது கொடிகளா கிற தனகைகளால வரவேறசலுறறது மூவரும அப பட்டணததின அறபுதக காட்சியினைததையும ஆனநத மாகப பாாவையிட்டுவநதனா. இராஜவீதியில அரண் மனை மேனமாடியில அசசமயம சீதாபிராட்டி தன சகி மாாகளுடன உலாவிககொண்டிருநதாள. அபபெண ணரசியை ஸ்ரீராமபிரான தன கணகொண்டு நோககலுற றான. பிராட்டியும அதேசமயததில ஸ்ரீசகுநநதனைத தன கண்களால நோகக நோகதது இபபடி இருவா நோககும ஒனறுபடவே இருவரும ஒருவரை யொருவா தமககுள வியநது பேசத தொடஙகினா.

விசுவாமிததிரா ஸ்ரீ ராமலடசுமணரை ஜனக மகா ராஜனது கொலுமண்டபததிறகுக கூட்டிச சென்றனா. முனிபுஙகவரைக கண்டதும் ஜனகமகாராஜன எதிர் நோககிச்சென்று வநதனை வழிபாடுடன அவரை அவரு

டன வந்தவரோடு அழைததுவநது பொற் பீடத்தில் அமரசசெய்தான.

மகரிஷி அநத ராஜேநதிரனுக்கு சூரியகுலத்தின பெருமையையும ஸ்ரீராமலடசுமணரின வரலாற்றையும விரிவாக எடுததுரைததார முனிவா சொலவதை ஜனகபூபதி கேடகுமபோது அவவேநதனது கண்கள ஸ்ரீராமபிரானுடைய திருமேனியழகில ஈடுபடடிருநதன. இதைக குறிபபாலுணாநத முனிவா அவவரசனை நோககி,

*" அலையுருவக கடலுருவத்து ஆண்டகைதன நீணடுயாநத
நிலையுருவப புயவலியை நீயுருவ நோககையா
உலையுருவக கனலும்ழ கட டாடகைதன உரமுருவி
மலையுருவி மரமுருவி மணணுருவிற் றெருவாளி "

ஆகவே,

× " வினயம வேறில்லை விறலபுனை தயாதனெனபான
தநயா மறறினி தனுவலி காணகுறச சமைநதாா "

எனறாா.

உடனே மிதிலை வேநதன தனனிடததிலுளள வில லைக கொணடுவரக கடடளையிட்டான. அறுபதினாயிரம போ செனறு அநத விலலைப பெருஙகஷ்டததுடன எடுததுககொண்டுவநதார்கள். அவ்விலலை ஸ்ரீராமபிரான ஒரு நொடிபபோதில் கிஞ்சிறறுஞ சிரமமினறி வளைத தொடிததான். இநத ஓசையைக கேடடதும எலலோருமு சநதோஷக் கடலில மூழ்கலாயினா. விவாகச சடங்

* ஆண்டகை-ஸ்ரீராமன் ; கனல-தீ ; வாளி-பாணம

× வினயம் - காரியம ; விறல - வெற்றி ; புனை-கொண்ட ; தனு-வில் ; சமைந்தாா-வநதாாகள்

குக் குரிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அயோத்திக்கும் தூது போயிற்று அங்குள்ளார் யாவரும் திரண்டு வந்தனர். நகர்முற்றும் தெய்வலோகமும் நாணும்படி அலங்கரிக்கப்பெற்றது. வாத்தியங்கள் பல முழங்கலாயின. முனிவர்கள் ஓமம் வளர்த்தனர் வேதமந்திரங்கள் உத்கோஷிக்கப்பெற்றன. மணப்பீடத்தில் மணமகனாகிய ஸ்ரீராமபிரானும், மணமகளான சீதாபிராட்டியும் உத்தமமான பட்டுப்பீதாம்பர பூஷணாதியலங்காரத்துடன் வீற்றிருக்கலாயினர்.

இப்போது மணமகனும் பிராட்டியும் பொருந்திய * போகத்தையும், யோகத்தையும் ஒத்து விளங்கினர். அப்போது,

† "கோமகன் முன்ஜனகன் குளிர்நன்னீர்
பூமகளும் பொருளும் என நீ என்
மாமகள் தன்னொடும் மன்னுதி என்னாத்
தாமரையன்ன தடக்கையின் ஈந்தான்"

அந்தணர் ஆசி கூறினர் அவருடைய தேவிமார் பல்லாண்டு பாடினர் மற்றவரனைவரும் வாழ்த்தெடுத்தனர். தேவர்கள் புஷ்பவ்ருஷ்டியையும், அரசர்கள் சொர்ண வருஷத்தையும், ஏனையவர் முத்து வருஷத்தையும்

* போகம்-போகியின் சுகம் (ஸ்ரீராமன்), யோகம்-சாதனமான தியானம் (சீதாபிராட்டி) - இறைவியை முன்னிட்டுக் கொண்டு இறைவனையடைய வேண்டுதலின் இவ்வாறு உவமிக்கலாயிற்று

† கோமகன்-ஸ்ரீராமன், பூமகளும் பொருளும்-திருமகளும் இக பர ஐசுவரியங்கள் இரண்டுமே—மாமகள்-சீதை, மன்னுதி-பொருந்தி வாழ்வாயாக, தடக்கை-விசாலமானகை

அமோகமாக வருஷித்தனர். ஸ்ரீராமபிரான் மந்திர பூர்வமாக ஆகுதிகளைச் செய்து பிராட்டியின் திருக்கரத்தைப் பிடித்தருளினன். இச்சமயம் பிராட்டி மாறுந்தன்மையையுடைய பிறப்புகளில் உடல்கள் உயிர்களைத் தொடர்ந்தேறப்பதை ஒத்திருந்தாள். பின்னர் வேள்வித்தீயை வலமவந்து, பொரியிட்டு, அம்மி மிதித்து, அருந்ததி கண்டு, பெரியோர்களை வணங்கி ஸ்ரீராமபிரானும் பிராட்டியும் மாளிகையிற் பிரவேசித்தனர்.

இதேகாலத்தில் இலட்சுமண பரத சத்ருக்னர்களுக்கும் ஜனகமகாராஜன் தன் தம்பியின் பெண்களை விதிப்படி மணஞ்செய்வித்தான். தான தருமங்கள் வழங்கப் பெற்றன. சிலநாள் கழிந்து தயரத சக்ரவர்த்தி தன் மக்கள் மருகியருடனும் மற்றவருடனும் ஜனகனிடம் விடைபெற்றுக்கொண்டு அயோத்திக்குத் திரும்பினன்

(வரும்)

மூன்று முழுப்பொய்யர்கள் ஓரிடத்தில் சந்தித்தபோது தங்களுக்குள் யார்பெரியபொய் சொல்லவல்லார் என்பதைப் பற்றிப் பந்தயம்போட்டுக்கொண்டார்கள். அப்பொழுது அவர்களில் ஒருவன்—“பார்த்தீர்களா பட்டணம் லைட்ஹௌஸ் சிகரத்தை! இங்கிருந்து 400-மைல் தூரத்திலிருந்தாலும், எவ்வளவு நன்றாயக் காணப்படுகிறது” என்று சொன்னான். “அந்தச்சிகரத்தின்மேல் ஒருகாக்கை அமர்ந்திருக்கிறது. அது உமக்குக் காணப்படவில்லை போலும்!” என்று வேறொருவன் பரிகசித்தான். “அந்தக்காக்கை கூப்பிடுகிறது கேட்டீரா?” என்று வினவி மூன்றாவன் மற்ற இருவர் வாயையும் அடக்கினான்.

குறிப்பு:—ஸீதா கல்யாணபடம் அடுத்த சஞ்சிகையில் வரும்.

# ஹாஸ்யம்

தஞசாவூா ஜில்லா குமபகோணம தாலூகா, கும்ப கோணம கஸ்பா சோலையபபன தெருவிலிருககும காம வலலியமமாள் குமாராகள அணணுககுட்டி சாஸ்திரி 1 இளையபெருமாளையஙகாா 2 சோணாசலம பிள்ளை 3 வஞசிப பததா 4. வீராசாமிசா 5 காதா பாசசா சாகிபு 6 மிஸடா ஜானபுல (Mr John Bull) 7. ஆகிய நாமஙகள வுழு சகோதராகளும மனமொபபி எழுதிக கொணட பாக தஸதாவேஜு என்ன வெனறால் தஞசா வூா ஜில்லா விளாஙகுடி கிராமததில ஷை காமவலலி யமமாளின முதல புருஷன திருநாராயண சாஸதிரியின போால படடாவாயிருககும நஞசை நிலஙகள் ஷையாா குமாரா அணணுககுட்டி சாஸதிரிககும, ஸ்ரீரஙகம ரஙக நாதா கோவிலில ஷை காமவலலியமமாளின இரண்டாவது புருஷன பெரிய பெருமாளையஙகாா போால நடநதுவரும நிதயபபடி கடடளை வருமபடி ஷையாா குமாரா இளைய பெருமாளையஙகாருககும, திருநெலவேலி ஜில்லா கன னியாகுமரி முனையில ஷை காமவலலியமமாளின 3-வது புருஷன சொககலிஙகம பிளளை நடததி வநத சொக்க லிஙகம பிளளை கமபெனி ஷையாா குமாரன சோணாசலம பிளளைக்கும லெததிவாடி கிராமததில விசுவப்பிராமண வீதியில் ஷை காமவல்லியமமாளின 4-வது புருஷன அந தோணிசாமி பததா பெயரால் பநதோபஸ்துப் பாதுகாப்

பாக வைததிருககும வைரககல நகைகள ஷெயாா குமாரர் வஞ்சிப் பததருக்கும, சிககததமபூரில ஷெ காமவலலியமமாளின 5-வது புருஷன கநதசாமிசா நடததிவநத சாராயககடையைச் சோநத சகல சொததுககளும ஷெயாருககுப பிறநத வீராசாமிசாவுககும, புலியூரில ஷெ காமவலலியமமாளின 6-வது புருஷன இஸமால ராவுததா நடததிவநத தோலகிடஙகு ஷெயாருககுப பிறநத காதாபாசசா சாகிபிறகும, களளககுடி மாாகெட ரூபெரினடெணடெணடாயிருநத ஷெ காமவலலியமமாளின 7-வது புருஷன மிஸடா ஸடோன எனபவரின பேரால மதராஸபாஙகியில போடடிருக்கும கவானமெணடு பிராமிசரி நோடடுகள ஷெயாருககுப பிறநத மிஸடா ஜானபுலலுககும சேரவேணடியது ஷெ காமவலலியமமாளின உததரகிரியையை 7 பிளளைகளும ஒததிருநது நடததிவிட வேணடும.

இநதப்படிககு நாஙகள 7 சகோதராகளும மனமொபபி எழுதிககொணட பாக தஸதாவேஜு.

நேயாகளே:—பாஸு ஸிவில கலியாணமசோதா (Basu Civil Marriage Bill) சடடமாக அஙகீகரிககப படடிருககுமானால மேலே குறிபபிடடிருககிறபடி பாக தஸ்தா வேஜுககள எழுதபபடும விநோதததையும பாாகக நோநதிருககும

---

**கடவுளின் அடியாரைக்**
**கடவுளென்றே பூசியுங்கள்.**

# ஓணான் ஸம்ஸார வாழ்க்கை.

ஒரு ஊரில் ஓர் ஓணான் இருந்தது. அதற்கு ஒரு நண்டு, ஒரு கட்டெறும்பு, ஒரு வண்டு, ஒரு கொக்கு, ஒரு காகம், இப்படி ஐந்து பெண்சாதிகள் இருந்தன. அவைகளோடு சுகமாக வாழ்ந்துகொண் டிருக்கும்போது நண்டு கர்ப்பமாகி பிரஸவத்திற்கு வரப்பருகில் இருந்த தன் தாய்வீடு போயிருந்தது. ஒருநாள் கட்டெறும்பு நண்டின் பிறந்த வீட்டுக்குப்போய்த் திரும்பிவந்து வண்டினிடத்தில் நண்டு சுகமாய் பிரஸவித்த சேதியைச் சொல்லிற்று. வண்டு வரிசையுடன் நண்டினிடம் போய்

“நண்டே பெருந்தேவி
அம்பி பிறந்தானா
அழுது கிடந்தானா
குழிதோண்டுங் கையாலே
முலைதாங்கி உண்டானா”

என்று விசாரித்தது. அதற்கு நண்டு

“தும்பி, தும்பி, தூணைத் துளைப்பாய்
காட்டு வண்டே கல்லைத் துளைப்பாய்
நீயா என்குலத்தை ஏச வந்தாய்
கொண்டுவந்த சாமானைக் கூடத்தில் வைத்துவிட்டு
தலைக்கடையாலே வந்தவள் புறக்கடையாலே போய்
விடு”

என்று சொல்லிற்று. வண்டு கோபமாய்க் கொக்கினிடம் ஓடிவந்து “கேட்டையா சேதி, நான்

பொன்னு பொன்னு மஞ்சள குளித்து
பொனனுந தூணிலே சாய்நது கொண்டு
தேவனுருககுக கஞசி வாாக கையிலே
கட்டெறும்பு எனகிற காட்டாணி வநது
அஙகசசி ஆணபிளளை பெறறாளே எனக"

நான

"சுககுக கொண்டு மிளகு கொண்டு
சூலடிக கஞசு பணமுங கொண்டு
நாயின தலையில நல லெணணெயும
பூனையின தலையில பூணடுங கருபபுட்டியும
இததனையுங கொண்டு காணப போனேன"

என்று சொலலித தான அஙகு சொனனதையும அதற்கு அது சொனன பதிலையும சொலலி முறையிட்டது. அதறகுக கொககு [ளாட்டி

"சொலலுவள சொலலுவள சொரணை கெட்டவள
சொலலாளே என்று எணணவும வேண்டாம
கொககுக கழுததுககுக காரையைப பூட்டினால
அதுவு மெததனை அழகாயிருககுமே"

என்று என்னையே சொனனாளே, உன்னைச சொல லக கேட்பானேன?" என்றது பிறகு காகததினிடம போய் முறையிட காகம, [ளாட்டி

"சொலலுவள சொலலுவள சொரணை கெட்ட வெள
சொலலாளே என்று எணணவும வேணடாம்
கருதத காலுககுப பாடகததை இட்டால
அதுவு மெதததனை அழகா யிருககுமே"

என்று என்னையே சொனனாளே, உன்னைசசொல்லக் கேட்பானேன?" என்றது. (மாதா மனோரஞ்சனி.)

# அறநெறிக்கும்மி

(தொடாசசி)

நமமிடததிறபிறா நடகக விருமபுமோா
நலலவழியிலே நாமும் பிறா
தமமிடததெனறும தவறாமல நடபபதே
தருமவழியடி தையலமினனே (9)

கோபமும தாபமும பொயயுமபுரடடும
கோளுமபகையும கொடிய தெனும
லோபமும சோமபலும பெருணடியும பொலலாப
பாபமாஙகொளளாதே பைநதொடியே (10)

சததியம நாணம பொறுமை அடககம
தாழமை மடமசசம சவமினசொல
பததிமை நறபு பழியஞசல இவையெலலாம
பாாபுகழ புணயமாம பைஙகிளியே (11)

மனமெனும குராஙகை அடககவேணும எனறும
மானததைப பெரிதாயக காககவேணும
தினமுங கடவுளைத துதிககவேணும இவை
தேனே பேரற மாகுமடி (12)

இலலையெனசசொலலும இரபபோாக கீவதே
நலலாருங கொளளுமோா நலலறமாம
வில்லை யனைய புருவவெழிலமாதே
விருமபித தினமிதைச செயவாயடி (13)

(வரும)

S. R. கணபதி சுப்ரமணிய அய்யர்,
தமிழ்ப் பண்டிதர்,
போர்டு ஹைஸ்கூல், கொள்ளேகாலம்.

# திருக்குறள்

## அறத்துப்பால்

### பாயிரம

### இரண்டாம அதிகாரம.—வானசிறபபு.

வானின றுலகம வழஙகி வருதலாற
றானமிழத மெனறுணரற பாறறு (1)

துபபாாககுத துபபாய துபபாககித துபபாாககுத
துபபாய தூஉ மழை (2)

விண்ணினறு பொயபபின விரிநீா வியனுலகத
துணணின றுடறறும பசி (3)

ஏரி னுழாஅ ருழவா புயலெனனும
வாரி வளஙகுனறிக கால (4)

கெடுபபதூஉங கெடடாாககுச சாாவாயமற றாஙகே
எடுபபதூஉ மெலலா மழை. (5)

விசுமபிற றுளிவீழி னலலானமற றாஙகே
பசுமபுற றலைகாண பரிது. (6)

நெடுஙகடலுந தனனீாமை குனறுந தடிநதெழிலி
தானலகா தாகி விடின (7)

சிறபபொடு பூசனை செலலாது வானம
வறககுமேல வானோாககு மீணடு (8)

தானந தவமிரணடுந தஙகா வியனுலகம
வானம வழஙகா தெனின. (9)

நீரின றமையா துலகெனின யாாயாாககும
வானின றமையா தொழுககு. (10)

உ

செந்திலாண்டவர் திருவடி துணை

# பாலவிநோதினி

அல்லது

# குழந்தைகளின் அன்பன்

ஒரு மாதாந்தப் பத்திரிகை


தொகுதி 5 | 1923ஞ் ஜூன்மீ | பகுதி 6


## கடவுள் வணக்கம்.

சந்தான புஷ்பபரி மள கிங்கிணீ முகச
    சரணயுக ளமிர்தப பிரபா
சந்த்ரசேகர மூஷிகாரூட வெகுமோக
    சதயபரி யாலிங்கனச
சிந்தாமணிக கலச கர கடகபோலத்ரி
    யமபாக விநாயகனை முதற
சிவனை வலம்வரு மளவி லுலகடைய
    நொடியில்வரு சித்ரக கலாபமயிலாம
மந்தாகினிப ரபவ தரங்க வித்ரங்க
    வனசரோத்ப கோத்திகா
வரபுத்ர ராஜீவ பரியங்க தந்திய
    வராசலனகுலிசாயுதத
திந்த்ராணி மங்கல்ய தந்த்ரரக்ஷா பரண
    விகலவேலவிநோதனருள்கூர
இமயகிரி குமரிமக னேறுநீலக்ரீப
    ரத்நகலாப மயிலே

அருணகிரி நாதர் அருள் வாக்கு.

# ஹிதோபதேசம்

1 குரு படியென்று சொன்னாலும் சொல்லாவிட்டாலும் மாணவன் படிப்பதிலே எப்போதும் முயன்றபடி இருக்கவேண்டும். ஆசிரியருக்கு எது பிரியமோ அந்தக் காரியத்தையே செய்தல் வேண்டும் அவர் மனம் கோணும்படி நடப்பது கூடாது குரு எப்போதும் மாணவனுடைய நன்மையை நாடியவராக இருப்பார்.

2 பெரியோர்களைக் கண்டால் எப்போதும் மரியாதையுடன் எழுந்து வந்தனம் செய்யவேண்டும் பெரியோர்களை வணங்குகிறவனுக்கு ஆயுள் அபிவிருத்தியாகும்; புகழ் பெருகும், திடமும் பலமும் உண்டாகும்.

3 தாய் தந்தையர்கள் மக்களின் நன்மையின் பொருட்டு எவ்வளவோ துன்பங்களைப் பொறுக்கிறார்கள் ஆனால் மக்களுக்கு அவர்களிடம் பொறுமையிருப்பது அரிதாயிருக்கிறது. இதனாலேதான் பெற்ற மனம் பித்து பிள்ளை மனம் கல்லு என்று பழமொழி வழங்குகிறது.

4. நல்ல பிள்ளைகள் தாய் தந்தையர்க்கும் குருவுக்கும் எப்போதும் பிரியத்தையே செய்வார்கள். அவர்கள் ஆசீர்வாதம் சகல நன்மைகளையும் கொடுக்கும். இந்த மூவரையும் ஆதரிக்கிறவனே தர்மங்களை யெல்லாம் ஆதரவு செய்தவனாவான். இந்த மூவரையும் ஆதரவு செய்யாதவன் எவனோ அவனுடைய செய்கைகள் யாவும் வீணாகும்.

5. ஸந்தோஷம், பொறுமை, அடக்கம், திருடாமலிருப்பது, பரிசுத்தம், சாஸ்திர ஞானம், ஈசுவர ஞானம், ஸத்யம், கோபமின்மை இவை தர்மத்தின் இலக்ஷணமாம்.

# சிவபெருமானும் செந்தமிழ்ப் புலவரும்

சிவபெருமான் அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் செய்தருளிய மதுரையம்பதியில் முன்காலத்தில் மூன்று தமிழ்ச்சங்கமிருந்தன. அவை முறையே முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்று பெயர் பெற்றன. கடைச்சங்கமிருந்த காலத்திலே வங்கிய சூடாமணி யென்னும் பாண்டிய ராஜன் அரசுபுரிந்து வந்தான்.

வங்கிய சூடாமணி நல்ல நீதிமான்; சிறந்த தெய்வ பக்தி வாய்ந்தவன். அவனும் அவன் மனைவியும் வசந்த காலத்தில் ஒரு நாள் உய்யான வனத்தில் சந்திரகாந்தக் கல்லாலமைந்த ஒரு திவ்யமணி மண்டபத்தில் தனித்து இனிதிருந்தனர். அப்பொழுது தென்றற் காற்றானது திவ்விய பரிமளத்தோடு வீசியது. பாண்டியன் "இந்த மணம் எங்கிருந்து வருகிறது? பூஞ்சோலைக் காற்று வீசின மணமுமன்று; காற்றுக்கேது மணம்? இது எதினுடைய மணமோ தெரியவில்லையே" என்று கருதித் தன் நாயகியைத் திரும்பிப் பார்த்தான்.

அந்தத் திவ்ய மணம் அவளுடைய கூந்தலிலிருந்து வீசுவது கண்டு, இது என்ன புதுமை என்று வியப்படைந்து "இவளுடைய கூந்தலுக்கு இந்த மணம் செயற்கையால் வந்ததோ இயற்கையால் வந்ததோ" என்று ஐய

முறுன; " இபபடி எனக்குணடான சநதேகததை
அறிநது பாடவலல விதவானுககு ஆயிரம பொன பரிசு
கொடுபபேன" எனறு சொலலி, உடனே ஆயிரம பொன
வரவழைதது அதை ஒரு முடிபபாகக கட்டி மநதிரியின
வசம கொடுதது, "இதனைச சஙக மண்டபததில சஙகப
புலவா முனனிலையிலே கடடித தொஙகவிடு" எனறு
ஆணையிடடான

மநதிரி அவவாறே செயதான சஙகப புலவாக
ளொவவொருவரும அதுபறறி ஆலோசிகக லாயினா
அவரவா தததம மனததிறகுப படடகருததை அரச
னிடம போயத தனிததனியே பாடிக காடடினா அர
சன கருதது அவாகள ஒருவருடைய பாடடிலும அமைய
விலலை ஆகையினுல சஙகப புலவாகள் எனன ஆசசரிய
மெனறு திகைதது ஒனறுந தோனருதவரா யிருநதனா

இபபடி யிருககையில, மதுரையில மீனுடசி சுநதரே
சுவாருடைய ஆலய பூஜை செயயும பிராமணன தருமி
எனபவன அநதப பொனமுடிபபைத தானடைய விருமபி
னுன. அவன பரம ஏழை, பிரமசாரி அநதப பொனமுடிபபு
தனககுக கிடைததால கலயாணம செய்துகொளளலாம
எனபது அவன கருதது ஆகையினுல அவன, மகாதேவ
னுகிய சோம சுநதரக கடவுளின பூஜையை நடததிமுடித
ததும, ஒரு நாள ஸநநிதியில காஙகூபபி நினறு, " அடி
யேன தநதையும தாயுமிலலாதவன, உனனை தவிர வேறே
ஆதரவிலலாதவன எனககு இனனும கலயாணமாகவிலலை
கலயாணம செயது கொளளவேண்டு மெனகிற அவா
இருககிறது. பொருளிலலாதபடியால அநத அவா நிறை
வேருமலிருககிறது. தேவதேவனே! மஙகைபஙகாளனே!

அரசனுடைய கருத்தையமைத்து ஒருகவி பாடியருளி
னால், நான் அந்தக்கவியை அரசனிடம்பாடி ஆயிரம்
பொன்னையும் பெற்றுக் கொள்வேன் எனமிடி தீரும்.
கிருபைசெய்யவேண்டும்" என்று பிரார்த்தித்துக்கொண்
டான்.

சோமசுந்தரக் கடவுள் வறுமைக்கிரங்கியருளும் தயா
நிதியாகையால், அவர் அந்தணன் முன்தோன்றி, "அன்ப!
வருந்தாதே, உன்விருப்பப்படியே ஒரு செய்யுள்பாடித்
தருகிறேன், அதைக்கொண்டு போய்ப்பாடி உன்மனக்கோ
ரிக்கையை நிறைவேற்றிக்கொள்" என்றுகூறி,

* "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத்தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவைகூந்தலி
னறியவு முளவோநீயறியும் பூவே"

எனும் பாடலைப் பாடிக் கொடுத்து, "நீபோய்ப்பாடு,
சித்திபெறுவாய்" என்றனுப்பினார்.

---

கொங்கு-வாசனையை, தேர்-ஆராய்ந்தறியும், வாழ்க்கை-
வாழ்வையுடைய, அஞ்சிறை-அழகிய சிறகுகளுள்ள, தும்பி-
வண்டே, காமம் செப்பாது-முகஸ்துதியாக (பொய்) பேசாமல்;
கண்டது-நீ (உண்மையாய்) அறிந்ததை, மொழிமோ-சொல்வா
யாக, பயிலியது கெழீஇய நட்பின் பழக்கத்தினால் உண்டா
கிய அநுபவத்தால், மயில் இயல்-மயில்போலும் சாயலையும்;
செறி-(வரிசைக் கிரமத்தில்) நெருங்கிய, எயிறு-பற்களையும்
(உடைய), அரிவை-(உத்தம) பெண்களின், கூந்தலின்-கூந்
தலை (தலைமயிரை)ப் பாகத்திலும், நறியவும்-உயர்ந்த மணம்; நீ
அறியும் பூ-நீ கண்டறிந்த புஷ்பங்கள் எதனிடமாவது, உன
வோ-இருக்கின்றதா? (இல்லை.)

தருமி அந்தப்பாட்டைப் பெற்றதும் பெரும்புதையல் கண்டெடுத்தவன்போல் மகிழ்ந்து ஜகதீசனைப்பணிந்து விடைகொண்டு பாண்டியன் முன்னே போய்ப் பாட்டை வாசித்தான். அந்தப்பாட்டில் தன்கருத்தமைந்திருக்கக் கண்ட பாண்டியன் மகிழ்ந்து, அந்தணனை நோக்கி, "இந்தப்பாட்டைக் கொண்டுபோய்ச் சங்கப்புலவர் முன்பு படித்துக் காட்டிப் பொன்முடிப்பைப் பெற்றுக்கொள்" என்று சொல்லியனுப்பினான், அந்தணனோடு தன் உத்தரவைச் சங்கப்புலவர்க்குத் தெரிவிக்க ஓர் அதிகாரியையும் அனுப்பினான்.

தருமி தைரியமாகச் சங்கப்புலவரிடம் போய் ஈசன் தந்த கவியைப் படித்தான். அதிகாரி, அந்தக்கவியை அரசனேற்றுக் கொண்டதையும் தருமிக்குப் பொன் முடிப்பைத் தரும்படி கட்டளையிட்டதையும் சங்கப்புலவர்க்குத் தெரிவித்தான் சங்கப்புலவர் எல்லோரும் அந்தக் கவியை ஒப்புக்கொண்டனர். ஆனால் அவர்களில் கீரர் என்பவர் அந்தக்கவியை ஒப்புக்கொள்ளவில்லை அவர் தருமிக்குப் பொன்முடிப்பைக் கொடுக்கக் கூடாதென்று தடுத்துவிட்டார், "இந்தச் செய்யுளிலே குற்றமிருக்கிறது, போ!" என்று தருமியை அனுப்பிவிட்டார்

தருமி என்ன செய்வான் பாவம்! நெடுங்காலம் அன்னம் கிடைக்காமல் பட்டினி கிடந்த ஒருவனுக்கு அன்னங் கிடைத்து, அவன் உண்ணப் போகும்போது அவன் கையை ஒருவன் பிடித்துக்கொண்டால் எப்படி அவன் கலங்குவானோ அப்படிக் கலங்கினான், "அந்தோ எல்லாம் வல்ல இறைவன் தந்த பாட்டிலும் குற்றமிருக்-

குமாரனால என்ன சொலவது ! ஆகா ! என வினை
கொடிது" என்று எண்ணிககொணடே ஈசுவரனுடைய
ஸந்நிதிககுப போய வணஙகி நின்று, "என ஐயனே
இநத வழுவான பாடலை ஏன எனக்குப பாடிககொடுததீர்?
அவமானபபடுமபடி யாயிறறே. என அபபனே, சாவ
லோக நாதனுகிய உன பாடலிலும குறற மிருககுமா
னுல நான என்ன சொலலட்டும? எனககுப பொருள்
கிடைககாவிட்டாலும போகிறது. அதறகாக வருநத
விலலை அறபாயுளும சிறறறிவு முடையவாகள உன்
பாட்டைக குறறமுடையதென்று கூறககேட்ட என
மனம படாதபாடு படுகிறது" என்று கூறிக கணணீா
விட்டு அழுதான

சோமசுநதரக கடவுள், உடனே ஒரு புலவராக
அவன எதிரில தோன்றினா அவா, கணடிகை, மதாணி,
மோதிரம, கழுமுடி, வைரமபதிதத கடுககன இவற
றைத தரிததுககொணடு முததமிழும வலலவா இவரே
என்று புகழுமபடி நெறறியில திரிபுணடா மிட்டுக
கொணடு இடையில பட்டாடையும உடலில பட்டஙகியும
அணிநது கொணடிருநதாா. அவா தோன்றியவுடன,
அடைபபை தாஙகவும, காளாஞசி தூககவும, கோடிக
மேநதவும, முததுககுடை நிழலின கீழ் சாமரை வீசவும
கறறுச சொலலிகளுந தோன்றினா வேதமே பாதுகை
யாகத தாஙகிறறு.

இவவாறு தோன்றிய சிவபெருமானுகிய புலவா
தருமியை அழைததுககொணடு அநதச சஙகமணடபம
சென்று, "கோட்டமில கவிககுக குறறங கூறினரியா
வா?" என்று கேட்டாா.

அதைக கேட்டதும கீரா,

"நாட்டிய புகழ் நககீரனை" என்று இறுமாப போடு பதிற் சொன்னா சொன்னவுடன சிவபெருமான, "அந்தக குற்றம யாது?" என்று கேட்டா. நககீரா "அப பாட்டிலே சொற குற்றமில்லை; பொருட்குற்ற மிருக கின்றது" என்றா புலவா, "பொருட்குற்றம யாது?" என்று வினவ, கீரா தமக்குக குற்றம வருவது தெரியா மல, "முடிக்கும பூவால மணமே யல்லாமல கூந்தலுக்குச சுயமே மணமேது? ஆதலின இல்லது கூறல என்னும பொருட் குற்றமாம?" என்றா இதைக கேட்டதும சிவபெருமான, "உததமஜாதிப பெணகளுடைய கூந தலுக்கும தெயவபபெண கூந்தலுக்கும மணம இயற கையன்றோ?" என்று கேட்டா. கீரா, "அந்தப பெண களின கூந்தலும மநதார முதலிய மலாகளினாலே தான மணமுறும" என்றா சிவபெருமான, "நீ துதிதது வணங்குகின்ற பரஞசோதியான திருககாளத தியப்பா பாகததே வீற்றிருக்கின்ற ஞானப பூஙகோதை கூந்தலும அப்படித்தானோ?" என்று கேட்டா. நக கீரா, சிறிதும அஞசாமல, "ஞானப பூஙகோதையாா கூந்தலுக்கும அப்படியே செயற்கையாலேதான மணங கமழும" என்றா. இதைக கேட்டதும கடவுட புலவா தமது நெற்றிக கணணையும சடையையும காட்டினா. கீரா, "நீரே பரமசிவனானாலும ஆகுக! நீா வடிவமுழுவ தும கணகளைக காட்டினாலும சரி; இந்தச செயயுள குற்ற முடையதே!" என்று சொன்னா.

சிவபெருமான உடனே வெகுண்டு "அறிவில்லாத

வனே, வேதஙகளாலே புகழபபடும அமபிகையினுடைய
கூநதலை எமமோடு மாறுபடடுச செருககினாலே பழித
தாயாதலால நீ குடட நோய கொணடு அலைக" என,
கீரா சிவபெருமானுடைய நெறறிககணணின வெமமை
தாஙகமாட்டாமல பொறறாமரைக குளததிலே போய்
விழுநதாா சிவபெருமான உடனே மறைநதருளினா

இதைககணட மறறபபுலவாகள, "ஐயோ கீரனமதி
யிலலாதவனுனை சொலலும பொருளுமாய விளஙகும
கடவுளோடு வாதுசெயத குறறமெபபடிததீரும, இனிக
கீரன பிழைபபதருமை அநத இறைவனே மனமிரங
கினால தான இவன பிழைபபான" எனறெணணி,

"திருததனே சரணம சரணம மறைச சென்னி மேல
நிருததனே சரணம சரணநிறை வேதநூல
அருததனே சரணம சரணநதிரு வாலவாய
ஒருததனே சரணம சரணஙகளுனககு நாம"

எனறும பாடித துதிததனா

உடனே சிவபெருமான அஙகயறகணணமமையா
ரோடு அபபுலவாகள குழாததினடுவே எழுநதருளிக
குளததிலே விழுநதுகிடககும கீரரை அருடகணணாலே
பாாததாா உடனே நககீரா "ஐயோ உலகமாதாவான ஞா
னப பூஙகோதையமமையாா திருககூநதலுககுக குற
றஞ சொனன என குறறததை என ஐயன சோமசுநதரக
கடவுளேயலலாமல வேறு யாா பொறுததருளுவா"
எனறு மனமநைநதுருகி, "காளததிகைலே" யெனறெ
டுததுச சொனமாறிமாறி யிசைய நேரிசை வெணபாவி
னாலே ஒரு திருவநதாதி பாடித துதிததாா. அது

கேட்ட சோமசுநதரக கடவுள அவர் முன்னே வநது அவா கரததைப் பிடிததுக கரையேற்றினா. கீரா, கரையேறியதும சிவபெருமானையும தேவியாரையும வணங்கி,

அறனிலா னிழைத்த வேள்வி யழிதத போராண்மை போற்றி
மறனிலாத தணடிக கீநத மாண்பெருங கருணை போற்றி
கருவிவீழ கூற்றைக காயநத கனைகழற் கமலம போற்றி
சிறுவனுக கழியா வாழ்நாள் அளிததருள் செயதி போற்றி

எனறு பாடித துதிததாா. மறறப புலவருமு ஜகநீசனை இவ்வாறே பாடித துதிதது வணங்கினா சிவபெருமான, நககீரரிடம இனனருள சுரநது,

"நின்நோய் விலகும் நீ எப்போதும்போல் புலவர் கூட்டத்திலே போயிரு"

எனறு கூறித தமது திருவுருக கரநது அமமையாரோடு திருககோயிலுககுள எழுநதருளினா.

பிறகு புலவாக ளெலலோரும சோநது சஙகத துககு முனபு தொஙகவிட்டிருநத பொனமுடிபபைத தருமிககுக கொடுதது அவனை வாழததி அனுபபினா. பாணடியனும சநதோஷமடைநது தருமிககு வேணடிய பொருள கொடுதது விவாகததை முடிதது வைததான

---

குறிப்பு :—இதனால உததம ஜாதிப பெண்களின் கூநதலுககு இயற்கை வாசனை யுணடெனபதும, கலவிக செருக்காகாதென்பதும அறியலாமேம.

# ஸ்ரீ ராமாவதாரம்

(122-ம பககத தொடாசசி)

மிதிலையிலிருநது புறபபட்ட தசரத சககரவாததி அயோததியை நோககித தன பரிவாரஙகளுடன சநதோஷ மாய முனனே செனறான. இநதப பிரிவைச சகியாத மிதிலாபுரி ஜனங களின மனமானது இவாகளபினனே செனறது தனனை யொதத தமபிமாாகள புடை சூழநது வரப பிராட்டி சகிதமாக ஸ்ரீராமபிரான நடுவே சென றான.

இபபடி இவாகள போகுமபோது மயில வலமாகவும காகம முதலியவை இடமாகவும குறுககிட்டன சகுனம நனறாயிலலையே எனறு சககரவாததி கவலையடை நதான சமீபததிலிருநத பட்சி ஜோசிய னொருவன "இச சகுனம வழியிற சிறிது துனபததை ஆரமபத தில கொடுபபதாயிருபபினும உடனே இனபததை விளை விககும எனகிற அறிகுறியைத தெரிவிககினறது" என றான. அதனால சிறிது மனச சாநதி பெறற மணடலா திபதி மயஙகாமல பிரயாணமானான.

கொஞசதூரம போனதும இவாகளைநோககி எவ

ரோ ஒருவா வெகு முடுககாய வருவதை இவாகள கண டாாகள அவரோ பேரொளி வீசும சடாபாரததையும, கொதிககுந தனமையைக கொணட மழுவாயுததையும உடையவராய் இடிபோனற குரலோசையுடன ஒருபொன மலை நடநதுவருவதுபோல வநதாா; பாாவைககு யுகாந தததில தோனறும ருததிரமூாததியைப போலிருநதாா.

இவவாறு வருபவா பரசுராமா எனறறிநதுகொணட சககரவாததிககு மனததிற பெருந திகிலுணடாயது

உடனே அரசன பரசுராமருடைய திருவடிகளில விழுநது பணிநது, மணககோலததோடு வரும தன மகனை யும தனனையும ஆசீாவதிததருளுமபடி வேணடிககொண டனன—பரசுராமா இவவேணடுகோளுககு கிணஙகவிலலை. க்ஷததிரிய தருமததை நிலைநாடடுமபடி வறபுறுததினாா. இபபோது ஸ்ரீராமபிரான எலலோரையும கையமாததி, பரசுராமரின முனவநது “உமது கருததெனன ?” என றுன பரசுராமா “நான க்ஷததிரியபபூணடை அடி யோடு போககக கஙகணங கடடிக கொணடிருககிறேன. ஏறகனவே அககுல நாசததை ஏறககுறைய முடிதது விடடேன முனபே ஒடிநதிருநத ஓாசததானவிலலை ஒடிததெரிநது பெருமை பாராடடின உன பராககிரமத தைக காண ஆசைபபடுகிறேன வேறொனறுமிலலை. இதோபாா என கையிலுளள விலலை இது பழுதடை யாத தொனறு. இதன மகிமையும பெரிது. இதனி டததில உன வலலமையைக காட்டி வெறறி பெறறுல உன குலம மேனமை யடைநததாகும” என்று கூறித தமது விலலை நீடடினாா.

* "அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்"

எனகிற உறுதிமொழியைப் பரசுராமர் மறந்து போயினர்.

ஸ்ரீராமபிரான் அவர் கொடுத்த வில்லை அந்த நிமிஷத்திலேயே வளைத்தருளினார். அதுகண்ட பரசுராமர் வெட்கமடைந்து தமது தவப்பயன் முற்றும் இழந்து மகேந்திரகிரியை நாடிச்சென்றார். சக்ரவர்த்தி முதலிய யாவரும் நிராடங்கமாக அயோத்திமா நகரை யடைந்தனர்.

அயோத்தியில் இவர்கள் எல்லோரும் சுகமாக வாழ்ந்து வரும் நாளில், ஒரு நாள், தசரத சக்ரவர்த்தி தனக்குள் தனது இராஜாங்க விஷயமான கவலை யொன்றை மேற்கொண்டான். அக்கவலையை நிவர்த்தித்துக் கொள்ள மந்திராலோசனைக்குரிய சபையை அம்மன்னர்பிரான் கூட்டினன். அச்சபையைச் சார்ந்த மேதாவியரோ சாமானிய ரல்லர், நீண்ட காலமாக வாழையடி வாழையாய் வரும் குலப்பெருமையை நன்குணர்ந்தவர்கள், கல்விகேள்விகளில் வல்லவராய் அவற்றின் பயனை அநுபவ வாயிலாகக் கண்டவர்கள், நடுநிலைவழுவாதவர்கள், காமக்குரோத லோப முதலியவைகளை வேரறுக்கக் களைந்தவர்கள், தரும நோக்கத்திலே தலையிட்டவர்கள்; நேர்ந்த சம்பவங்களைக் கொண்டு இனி நேரக்கடவன

* அமைந்து-அயலாரோடு பொருந்தி, ஒழுகான்-நடவாதவனாகியும்; அளவு அறியான்-தன் வல்லமையின் அளவை யறியாதவனாகியும், தன்னை—, வியந்தான்-(தானே) மெச்சிக் கொண்டு (அவரோடு பகை கொள்பவன்); விரைந்து கெடும்-சீக்கிரத்தில் அழிந்துவிடுவான்

வற்றை யூகித்தறிபவர்கள்; சூழ்வினைப்பயனையும் ஒழிக்க
கவல்லவர்கள்; உயர்தரப்பிறப்பின் உன்னதம் தெரிந்தவர்
கள்; அருமையான கலைகளிலும் பழகியவர்கள்; 'நாணு
டைமை மாந்தர் சிறப்பு' என்னும் ஞாயத்தில் கவரி
மானை யொத்தவர்கள்; இடம்பொருள் ஏவல் முதலிய
வற்றை நுணித்தறியத்தக்கவர்கள். தங்கள் தலைவற்கு
அத்தியாவசியமாக வேண்டற்பாலனவாகிய உறுதிகளை
உதவக்கூடியவர்கள் அரசன் கோபித்துக் கொண்டபோ
திலும் அக்கோபத்தைப் பொருட்படுத்தாமல் ஞாய
மார்க்கத்தையே மென்மேலும் அவனுக்குப் போதிக்க
முந்தும் வீரர்கள், திரிகால வர்த்தமான முந் தெரிந்
தவர்கள் பல சொல்வானேன்—அரசனுடைய உத்தம
மான நுண்ணிய உணர்வே பல வுருவம் பூண்டு அவனைச்
சூழ்ந்திருக்குந் தன்மையைப் போன்றவர்கள்.

இத்தகையோர் அனைவரும் ஒன்று சேர்ந்தனர்.
சேர்ந்தவர்கள் வசிஷ்ட பகவானை வணங்கி அரசனை ஆசீர்
வதித்தார்கள். வேந்தன் அவர்கள் திருமுகத்தை நோக்கி
'ஐயன்மீர்' உங்களுடைய திருவருளால் அடியேன் இந்தப்
பூமண்டலத்தை யாதொரு குறைவு நேராதபடி அரசபு
ரிந்து வந்தேன். ஒரு நாளல்ல—இரண்டு நாளல்ல—அறு
பதினாயிர வருஷமாக இந்த அரசாட்சியைத் தாங்கி வந்
தேன். எல்லா உயிர்களுக்கும் இதத்தையே தேடி நின்
றேன். மூப்பும் வந்துவிட்டது. இனி என்னுயிர் நற்
கதியடையும் மார்க்கத்தைத் தழுவவேண்டியவனா யிருக்
கிறேன். இதற்குச் சகாயமாகக் கூடியவர்கள் சற்புத்தி
ரரே. இராமனென்னும் நல்ல பிள்ளையைப் பெற்றும் நான்
இன்னும் இந்த இராஜ்யபாரத்தை ஏற்றுக் கொண்டிருப்

பது தருமமலல எனககு இதநதேடுபவாகளான நீங
களே இவ் விஷயமாய நான இனி நடததவேண்டிய முறை
மையை வெளியிடலவேணடும்" எனறு விளமபினன

அரசன இவவாறு புகனறதைக்கேடட மநதிரததலை
வா சிறிது நேரம ஆழநத யோசனையி லிருநதாாகள.
இரணடு கனறுக ிரங்கும ஒரு பசுவைப போல தவித
தாாகள உடனே வசிஷடா சகரவாததியை நோககி
"மனனரேறே! உமது யோசனை கிலாகிககத தககதே
சூரிய குலநதோனறி நீதிவழுவாது அரசு புரிநது வநத
அரசரோ பலா அவாகளுள உமமைப போனறு யாவ
ரோ நறகுண நறசெயல வாயநத இராமனை யொதத புத
திர ரததினததைப பெறறெடுததாாகள ஆதமாாதத
தை விருமபும உமது கருததை நிறைவேறற வலலவன
இநத இராமனே இவன உமமினுமளததனையோ மடஙகு
ஒழுஙகு பெற இவவுலகததைப பரிபாலிபபான இது
பறறி நீா வருநதுதல வேணடாம" எனறாா

வசிஷடருடைய வாககைப பிறரும ஆதரிதது
இரகு நநதனனை வெகுவாகப புகழநது பேசினா தசர
தன அவவாறே செயயத தீாமானிதது இராமசநதிரனைச
சபைககு வரவழைததான ஸ்ரீராமச சநதிரன வநததும
எலலோரையும வணஙகி நினறான தசரதன அவனி
டம சநதோஷமடைநது, 'ஸ்ரீராமா, உனனை இநத இராஜ
யததுககு அரசனாககி நான தவம புரியக காடடிறகுப
போகவிருககிறேன. உன சமமதமெனன?" எனறு
கேடடான.

ஸ்ரீராமச சநதிரன, இதைக கேடடதும தன இரு
கரஙகளையும உசசிமேல கூபபி நினறு "என அருமைத

தநதையே, பெரியோாகளே ! அரசுரிமை பெறறுப பரி பாலிபபதறகுரிய வலலமை ஒரு சிறிது மிலலாதவன கான, சிறியன, இராஜநீதி உணராதவன, இருநதாலும் பெரியோாகளாகிய உங்கள விருபபம் அதுவாயின் நான் அவ்வாறு நடககக கடமைப பட்டவனுகிறேன். ஆகை யினுல உமது கடடளையை விருபபோடு ஏறறுக கொள கிறேன" எனறு வெகு பணிவாய மறுமொழி கூறினன.

இநத மறுமொழி கேடடதும, தசரதன ஸ்ரீ ராமச சநதிரன பிறநதான எனற செயதி செவியிலே விழுநத போது அடைநத சநதோஷததைவிட அதிகமான மகிழசசியை அடைநதான பெரியோாக ளெலலோரும பெரு மகிழசசிகொணடு ஸ்ரீராமச சநதிரனைப புகழநது " தநதைசொல மிகக மநதிர மில்லை எனபதை உணாநத உனககுச சகல நனமைகளும உண்டாகும" எனறு ஆசிாவதிததனா

பிறகு தசரதன,— குலகுருவான வசிஷடரைக கொணடு வேண்டும நீதிமுறைகளை ஸ்ரீராமனுககுப போதிககுமபடி திடடஞ செயதான படடம பெறு வதறகுரிய அலஙகாரஙகளை ஸ்ரீராம பிரானுககுச செய யுமபடி ஆகயாபிததான நாளை இராமன பட்டம சூடடப போகிறுன எனறு தணடோரா மூலமாக யாவருககும வெளிபபடுததுமாறு கடடளையு மிடடான

வசிஷடா ஸ்ரீராமபிரானுககு நீதிகளைப புகடடத தொடஙகிஞா. " ஸ்ரீராமா ! நீ நாளையதினம அரச ஞக முடி சூடடிக கொளள விருபபதால இராஜநீதிகளைத தெரிநதுகொளள வேண்டிய தவசியம. அறிவறிநத பிள்ளைகளுககு யான எடுததோதுவது ஒனறுமிலலை.



ஸ்ரீராமசசநதிரன அரசியை ஏறபது (176-ம பககம பாரகக)

ஆயினும் முறைமையைக் கைப்பற்றவேண்டியது முக்கியமாதலால், நான் சொல்லும் நீதிகளை மனங்கொள்வாயாக—உலகத்தில் பெரியோர்கள் அந்தணர்களே மும்மூர்த்திகளும் அவர்களுக்கு அடக்கமாட்டார்கள். ஆகையால் அவர்கள் விஷயத்தில் மிகுந்த பயபக்தியாய் ஒழுக வேண்டும் அவர்களுடைய சாபத்தால் அழிந்துபோனவர்களும் அநுக்கிரகத்தால் உயர்ந்து போனவர்களும் தேவ வகுப்பிலேயே பலரிருக்கிறார்க ளென்றால் மற்ற வகுப்பார் அவர்களை எவ்வாறு கருதி நடந்து வர வேண்டும் என்பதை நீயே ஆராய்ந்து பார். அதுபோலவே தேவரையும் பாவித்து நடக்கவேண்டும் அரசருக்குச் சூது ஒரு விளையாட்டா யிருந்தபோதிலும் அதைப்போல ஒருவரை அடியோடு கெடுக்கவல்லது வேறெதுவுமில்லை. அரசர் அந்தச் சூதைக் கனவிலும் நினைத்தல் கூடாது அன்றியும் அரசனானவன் எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்த வேண்டும் அனுகூலரிடத்தில் அறக்கருணையும் பிரதிகூலரிடத்தில் மறக்கருணையுங் கொள்வது அரச தருமம் அரசன் என்னதான் சாமர்த்தியவானா யிருந்தாலும் எந்த விஷயத்தையும் மந்திரிமாரோடு கலந்து யோசித்துச் செய்தல் வேண்டும். குடிகளை உயிராகவும் தன்னை அவ்வுயிர்க்குரிய உடலாகவும் பாவிப்பவன் அரசரில் உத்தமனாவான். காட்சிக்கு எளியவனும் கடுஞ்சொல் வழங்காதவனுமுள்ள வேந்தனை உலகம் கைகூப்பிப் புகழும் அரசன் தன்னைத் துலைக் கோலுக்கு நிகராக மதித்துக் குணங்குற்றத்தைக் கண்டு பிடித்தல் வேண்டும். சாம தான தண்ட பேதம் என்னும்

சதுர்வித உபாயஙகள் அரசனது முனனேற்றததிறகுப பெரிய சாதகமாயிருக்கின்றன. ஏழை அழுதகண்ணீர் கூறியவாளோகும் எனனும பழமொழியை எபபோதும ஞாபகததில வைதது ஆதரவறறவாகளைப பெரிதும கவனிததல வேண்டும. ஆததிரப படடு ஒனறையுஞ செயயலாகாது. விஷய இசசையில புததியை அடககி வரவேணடும" எனறு அரசன அறியவேணடிய நீதிகளனைததையும போதிததருளினா.

பினனா மஙகளஸநானஞ செயவிததுக குலதெயவமாகிய ஸ்ரீமந நாராயணனை வழிபடவைதது, ஸ்ரீராமபிரானுககுப படடததுககான அலஙகாரஙகளைச செயயத தொடஙகினா இநத நலல சமாசாரததைத தணடோரா மூலமாகக கேளவியுறற நகர ஜனஙகளும பிறருமஆனநதககடலில மூழகினவாகளாய சகரவாததியைப கொணடாடினாகள. ஆனால மநதரை எனனுங கூனிககு மடடும இபபேசசு செவியில நாராசததைக காயசசி நுழைததது போலிருநதது கூனி எனபவள கைகேயியின தோழி. ஸ்ரீ ராமபிரான சிறுவயதில உணடைவிற கொணடு விளையாடிய போது ஒருணடையை விளையாடடாகக கூனியின முதுகினமீது விடடனன. இது அவளுககுப பெருங கோபததை உண்டுபண்ணியது. அநத வனமததை மனதில வைததிருநது ஸ்ரீராமபிரானுக்குக் கெடுதி தேடவேணடுமெனறு அவள் சமயம பாாததிருநதாள. தெய்வாதீனமாய் அவளுக்கு இது நலல சநதாபபமாக முடிநதது.

(வரும.)

## கலியின் இரகசியம்.

பாரதப்போர் முடிந்ததும் பாரத கண்டத்தைப் பாண்டவரின் தலைவராகிய தரும புத்திரர் அரசுபுரியலானார். அப்போது உலகத்தில் அன்பு, அருள், அடக்கம், பொறுமை, ஐக்கியம், தானம், தவம் முதலியவை தலையெடுத்துத் தழைத்துவந்தன. குடிகள் வறுமையின் கொடுமையைச் சிறிதும் அறியாதவர்களாய் இன்புற்று வாழ்ந்திருந்தனர். செல்வப் பெருக்குஞ் செல்வாக்கும் சிறந்து விளங்கின. கோளுரைக்குங் குண்டுணித்தனம், விகற்பத்தைத் தரும் மித்திரத்துரோகம், மனக் கொதிப்பை வளர்க்கும் பொறாமைக்குணம் முதலிய கெட்ட விஷயங்கள் தலையிறக்க முற்றுஞ் சரிந்தோடின. காலமழைகள் கனிந்து பெய்தன. பயிர்வளங்கள் பரந்தோங்கின. ஆகையால் உலகமானது யாதொரு குறையுமின்றிப் பெருமித வாழ்வைப் பெரிதும் பெற்றுவந்தது.

இப்படி நடந்துவந்தது துவாபரயுகத்தின் பிற்பகுதியிலென்பர். அந்த யுகாந்தத்தில் ஓர் அதிசயச் சம்பவம் நேர்ந்தது. அதுவே கலியின் இரகசியமாம். அவ்விரகசியம் நமது இந்திய நாட்டின் வடபாரிசத்திலிருந்து ஒரு பத்திரிகை மூலமாய்ச் சில வருஷங்களுக்குமுன் ஆங்கில பாஷையில் வெளியாயது. அதன் கருத்தை இப்போது

நாம நமது பாலவிநோதினியில தமிழப பாஷையில பேசு வோமாக —

மேறசொனனபடி தருமநநதனா இராஜயபாரம செயதுவநத காலததில, அவருடைய தலை நகரில (அஸ தினுபுரியில), ஒருநாள மாலைப பொழுதில, கருதத நிறமுளள புருஷனொருவன குனறுடு கொழுமுகிலபோல, குரை கடலபோல, குவளைகளபோல, நினறுடு மயிற குலமபோல, நீரோட்டமுளள * நீனமணிபோல நிறங கொணட அழகிய குதிரை யொனறைத தன கையிற பிடிததுக கொணடு, வியாபாரஙகள பல நடககும கடை வீதியை நோககி வநது கொணடிருநதான.

இநதக குதிரையை அஙகொரு புறம உலாவிக கொணடிருநத நகுலன கணடெடுததுப பாாததான "இபபடியும ஒரு குதிரை உலகிலுணடா?" எனறு இறுமபூதடைநதான. உடனே அநதக கரிய புருஷ னிடஞசெனறு "ஐயா! நீரிககுதிரையை இப்பககமாக ஓடடிக கொணடு போவதைக கவனிததால, இது விற பனைக குரியதெனறு தெரியவருகிறது. அபபடியா யின இதனவிலை என்ன? கூசாமற சொலலும எவவள வாயினும கேட்பதைக கொடுதது நாஙகள வாஙகிக கொளளுகிறோம. எஙகள தமையனுருககு இது உப யோகமாகலாம அவரும வயோதிகராயிருககிறா இந தக காலததில இததனமையான குதிரை அவருககு வேணடுவது அவசியம. உமது கருததை ஒளியாமல வெளியிடும" எனறு கேட்டான.

* நீனமணி—நீலமணி

கரிய புருஷன நகுலனை ஏற இறஙகப பாாதது "நீா யாா?" எனறான நகுலன "யாரா யிருநதாலெனன? திருப்திகரமான விலைதானே உமககுத தேவை சநதே கப படாமல உமது மனதிலுளள விலையைத தெரிவி யும" எனறான.

நகுலன குதிரைப பரீகைஷயில தோநதவன ; சுழி சுததம முதலிய லகஷணஙகளைக கணடறிவதில போ போனவன மேறபடி குதிரையை இவன சோதிததுப பாாதது அதனிடம எததகைய தோஷமும இலலை யெனறுணாநதான; அதனால அதை எவவிததநிலா வது பெறறுத தன தமையனுககுக கொடுககவேணடு மெனகிற எணணததை மேறகொணடான.

நகுலன இவவணணம கேடகவே, குதிரைககாரன "சரிதான ஐயா—நீா இனனாரெனபதை நானறியககூடா தோ?" எனறு பினனும வினவினான "கூடாதெனறு சொலலவிலலை. ஆகவேணடிய காரியததை விட்டு அநா வசியமான பேசசேன எனபதுதான எனககருததது" எனறான நகுலன குதிரைககாரன "நான உமமையறிய விருமபுகிறேன. தயவு செயது தெரிவியும" எனறான.

நகுலன "அபபடியானால தெரிவிககிறேன என போ நகுலன; நான தருமபுததிராருடைய தமபி" எனறான. "தருமராஜாவின தமபியா நீவிா? மெததவும சநதோ ஷம. இநதக குதிரையை நான விறபனைககுக கொணடு வரவிலலை என மனதில ஒரு சநதேக மிருககிறது. அதை நிவாததி செயயவாககு இதை இனாமாகக கொடுகக விருககிறேன" எனறான. இவவாாததை நகுலனுககுப பரமாநநததை யுண்டுபணணி விடடது. அவன குதி

ரைக்காரனுடைய முகததைப் புனனகையுடன பாாததுச் "சநதேகததை நிவாததிப்பது எனககொரு பெரிதாகத தோனறவிலலை. உமது உளளததிலுள்ளதை உடனே சொலலலாம" என்ருன. குதிரைககாரன "ஐயா நகுலரே! நான சொலவதைக கவனிததுக கேளும. ஓரிடத்தில பெரிய கிணறு ஒன்றுண்டு அந்தக கிணற்றை அடுத்தாற்போல ஏழு சிறு கிணறுகளும் உண்டு. பெரிய கிணற்றின் ஜலம் அவ்வளவும், முகநது கொட்டினுல், சிறு கிணறுகள் ஏழையும் நிரப்பி விடுகின்றது. ஆனுல் இந்த ஏழு சிறு கிணறறு ஜலம் அவவளவும் அந்தப் பெரிய கிணறு ஒனறை நிரபப முடியவில்லை இசசநதேகததை நிவாததி செயதுவிட்டுக குதிரையைக கொணடுபோகலாம" எனருன.

இககேள்வியினுல நகுலன அதிசயமடைநதான. "பெரிய கிணறறு ஜலம சிறிய கிணறுகள ஏழுககும சரிபட்டுப போகுமபோது, சிறிய கிணறுகளின ஜலம முழுதும எபபடி அநதப பெரிய கிணறறுககுச சரிபடாமறபோம? இக கேளவி நியாயமான தாகத தோறறவிலலை கேவலம பரிகாசததிற கிடமானதா யிருககிறது ஆகிலும ஆழநது யோசிததுப பாாபபோம குதிரையை அடைய வேணடுமானுல உடையவனை எவவிதததிலாவது திருபதி செயயவேண்டும" எனறு தனககுள எணணி அஙகொரு புறம நினறு கொணடு யோசிககலானுன குதிரைககாரனும அவவிடததிலேயே தஙகலானுன

இஙஙன மிருக்கத தருமபுததிரா அாசசுனனை அழைதது "தமபி! நகுலன எஙகே? வெகு நேரமாக அவனை நான இஙகுக காணவிலலையே?" எனறு கேட்டாா. அதறகுத தனஞசயன "அவன இஙகெஙகாவது வேடிககை பாாததுககொண டிருப்பான நான போய்

அழைத்து வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கடைவீதி வழியாக வந்தான்.

வந்த அர்ச்சுனன் அங்கோரிடத்தில் கரிய நிறமுள்ள புருஷனொருவன் கருநிறமுள்ள அழகிய குதிரையொன்றைப் பிடித்துக்கொண்டு நிற்பதைக் கண்டான். நகுலனைப் போலவே இவனும் அந்த அசுவத்தின்மீது விருப்பங்கொண்டு சொந்தக்காரனைப் பார்த்து "ஐயா! இந்தக்குதிரை விற்கப்படுவதானால் நான்வாங்கிக்கொள்ளுகிறேன். கிரயம் என்ன?" என்று கேட்டான். குதிரைக்காரன் நகுலனைக் கேட்டதுபோலவே இவனையுங் கேட்டான். அர்ச்சுனன் தன் பெயரையுந்தான் இன்னாருடைய தம்பி என்பதையுந் தெரிவித்தான். குதிரைக்காரன் "ஆநந்தம்! ஆநந்தம்!! இது விற்பதன்று எனக்குள்ள ஐயத்தை நீக்க வல்லவர்க்குப் பரிசாகத் தரப்படுவது இதுவேயாம்" என்றான். "என்ன கேட்கப் போகிறீர்—கேளும்" என்று அர்ச்சுனன் கூறினான். அதற்கு அப்புருஷன் "ஒரு யானையானது தன்மீதிட்ட அம்பாரத்துடன் சிறிய ஊசி யொன்றின் காதில் நுழையத் தலைப்பட்டது. அவ்வாறே அதன் தேகமுற்றும் நுழைந்துவிட்டது. ஆனால் வால்மாத்திரம் நுழையக் கூடவில்லை. இதன் பொருளை வெளியிட்டுக் குதிரையைக் கொண்டுபோகலாம்" என்றான்.

அர்ச்சுனன் தான்வந்த காரியத்தையும் மறந்து இவ்விசித்திரக் கேள்வியை விளக்கவேண்டிய உபாயத்தைக் குறித்துச் சிந்திக்கலானான். நகுலனை அழைத்துவரப் போன அர்ச்சுனன் திரும்பாமையால் தருமர் பீமனைக் கூப்பிட்டு "தம்பி! வெளியேபோன நகுலன் வராமையால் அவனை யழைத்துவர அர்ச்சுனனை யனுப்பினேன். அவனும் இன்னும் வரக்காணோம். எங்கேனும் விளையாட்டு விஷயமாகப் பொழுது போக்கிக்கொண் டிருக்கிறானோ என்னவோ தெரியவில்லை. நீபோய் அவனையும் நகுலனையும் கண்டுபிடித்து அழைத்துக்கொண்டுவா" என்று அனுப்பினார்.

பீமனும மேறசொனன மாாககமாகவே வநது ஒரு குதிரையைககணடு, ஆசைகொணடு, விலை கேடக, உடையவன முனவநதவாகளைக கேடடது போலவே கேடடுப பீமனுககும ஒனறு சொனனன "ஐயா பீமசேனரே! ஒருவன் ஒரு நிலததில் பயிரிட்டான அந்தப் பயிரை ஆடுமோடு முதலியவை அழிததுவிடாதபடி வேலி போட்டான அறுவடை காலததில வநது பாாககும்போது வேலியே பயிரை மேய்நது விடடிருககககண்டான். இதன பயனை வெளிபபடுததிக குதிரையைககொண்டு போம' எனறுன. இதுபறறிப பீமனும, வநத வேலையை விடடுவிடடு, ஆழ்நத யோசனையில அமாநது விடடான குதிரைககாரன இநதச சமயததில குதிரையுடன மறைநது விட்டான

கொஞச நேரஙகழிநததும பீமன தன யோசனையி னினறும திருமபி "இது அசாததியமான கேளவி. இதன பொருளை நமது தமயனுரைக கேடடே தெரிநது கொளளவேணடு" மெனறு நினைதது, அாசசுனனையும நகுலனையுஙகணடு அவாகளும ஒவவொரு கேளவியால மயககபபடடிருககிறுாகளெனபதை யறிநது அவாகளை அழைததுககொணடு தருமரிடம வநது சோநதான.

வநததும பீமன தருமரை வணஙகி "அண்ணு! ஓரதிசயம். இவவூரின கடைவீதியில ஒரு கருதத புருஷன கரிய குதிரையொனறைக கொண்டு வநதான. அதுவோ பாாபபவா கணகளைப பறிககததகக அழுகோடு கூடியிருநதது. தஙகளுககு அது பயனபடக கூடுமெனறு கருதி நாஙகள விலைபேசினேம குதிரைககாரன, குதிரை விறபதனறெனறும, தான கேடகும கேளவிககுபபதி லளிததால இனுமாககொடுககபபடும எனறும சொலலி ஆளுககொரு கேளவியாக எஙகள மூவருககும மூனறு கேளவி விடுததான. (வரும.)

ம இராஜ கோபால பிள்ளை,
விதவான, கோமளேசுவரன் பேட்டை, சென்னை.

அவன் மேலே குப்பைகளைப்போட்டு மூடி அம்பட்டன் தலையில் தூக்கி வைத்தாள்.

அம்பட்டன் கூடை தலைக்கேறியதும் தன்னை மறந்தவனாய் மெதுவாய் வெளியே சென்று குழந்தையை ஓரிடத்திலே பத்திரப்படுத்திவிட்டான். அவன் சென்ற பின் பனு, "பனுபீர் தன் எண்ணத்தை முடிக்க இங்கே வருவான். குழந்தை உதயசிங்கைத் தேடுவான். இல்லாவிட்டால் என்னைக் கேட்பான். கேட்டால் நான் என்ன பதில் சொல்வது?—பிறகு அதில் சங்கடமேற்படும் ஆகையினால் இதற்கோர் உபாயந்தேட வேண்டும்" என்றெண்ணிச் சற்று ஆலோசித்தாள். அவள் மனத்துக்கு ஓர் யுக்தி புலப்பட்டது. உடனே சந்தோஷங்கொண்டாள்.

அவளுக்கொரு பிள்ளை ஐந்து வயதிலிருந்தான். அந்தப் பிள்ளையை உதயசிங் படுத்திருந்த இடத்தில் படுக்க வைத்துவிட்டுத் தானொரு மூலையிலே போய் ஒளிந்துகொண்டு பனுபீர் என்னும் பாவி வருவதைப் பார்த்துக்கொண்டு நின்றாள். பனுவின் மனத்தைக் கவனித்தீர்களா? தன் பிள்ளையை உயிரோடு பிறருக்காக இவ்வாறு இழக்கத் துணியும் தாயுமுண்டோ உலகத்தில்?—இவளுடைய இராஜ பக்தியே இவளை இவ்வாறு செய்யத் தூண்டியது; துணிவைத் தந்தது!

இப்படியிருக்கையில் நடுநிசியில் பனுபீர் உருவிய கத்தியுடன் வந்தான். அவன் வருவதைப்பார்த்த பனு, "ஆ! ஆ! கொலைபாதகா! படுபாவி! இராஜத்துரோகி! உன்னைத் தெய்வம் சும்மா விட்டுவிடுமா? எந்த நரகம் நீ அடையப்போகிறாயோ?" என்று மெதுவாய்க் கூறிக்கொண்டாள். அவள் தேகம் நடுங்கியது! உள்ளம்

பதைததது' பனுபீா கிடட நெருஙகிவிடடான அப
பொழுது பனு மூாசசையாய் விழுநது விடடாள. அந
தககணமே கொலைபாதகன குழநதையின மாாபிலே கத
தியைப பாயசசினன குழநதை வீறிடடலறி இறநதது.
அநதக கூசசல அரணமனை முழுதும கேடடது பாத
கனைச சிசுஹததி தொடாநதது அவன அநதததுணை
யுடன அககணமே மறைநதான. பிறகு அவவிடததில
பெருங கூடடஙகூடி விடடது எலலோரும, பனு
மூாசசிதது நிறபதைககணடு இவளுககுததான ஏதோ
நோநதிருககிறதெனறெணணி அவள முகததில குளிாநத
நீரைத தெளிதது எழுபபினாகள அவள எழுநதும
பிததஙகொணடவளைப போல விழிததாள' குழநதை சவ
மாயிருபபதையும அதன மீது இரததம பெருகியிருப
பதையும அரணமனை ஜனஙகள இபபொழுதுதான பாாத
தாாகள, உதயசிஙகனே இறநது விடடானென்று தீாமா
னிததாாகள

அபபால காலமணி நேரததிறகெலலாம பனு தன
நினைவை யடைநதாள அவள பனுபீா வநது குழநதை
யைககொனறான என்று உணமையைச சொனனல
அவனால இடையூறு நேருமென்றஞசி யாரோ கரிய நிற
முடைய மனிதன திடீரென்று பிரவேசிததுக குழநதை
யைக கொனறுவிடடதாகசகூறி நடநததை மறைததாள;
பெருநதுககபபடடாள இநதச செயதி ஊா முழுவதும
பரவிவிடடது

இபபடியிருககையில பனு அமபடடனைத தேடிக
கொண்டு வேகமாய்ச சென்று அவனைக கணடு உதய
சிஙகைக் கண்டுபிடிதது அவனை வெகுஜாககிரதையாயக

காப்பாற்றி வந்தாள் உதயசிங்குக்குத் தக்கவயது வந்ததும் அவனை வெளியே செல்லவிட்டாள் அவனை எல்லோரும் இராஜகுமாரனெனக் கண்டு கொண்டார்கள். உடனே அவன் பக்கம் பெருந்திரளான ஜனங்கள் சேர்ந்து கொண்டார்கள், பனுபீரை எல்லோரும் எதிர்த்தார்கள் பெருஞ் சண்டையுண்டாயிற்று சண்டையில் பனுபீரை யமலோகத்திற்கு அனுப்பிவிட்டார்கள் பிறகு உதயசிங் சிங்காதனமேறினான் பனுவின் இராஜவிசுவாசத்தை உலகமெல்லாம் புகழ்ந்தது

## ஹிதோபதேசம்

1. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள், கதவுள்ள போதே சாத்திக்கொள் என்பதுபோல நீ உயிருடனிருக்கும்போதே, நல்ல செய்கைகளைச் செய்து புண்ணியம் பெற்று ஈசன் திருவருளுக்குப் பாத்திரவானாக முயலு இதுதான் எந்தப் பெரியோரும் எந்த மதமும் எந்த கலை நூலும் உபதேசிக்கும் உபதேசமாகும்

கீர்த்தியணி தாக்குநற் பூடணம் இருங்கலவி
 கேள்வி யிளையோர் பூடணம்
கிடைப்பருங் குலமகட்குக் கணவனைப் பேணல்
 கேடிலா தொளிர் பூடணம்
பார்த்திவர்க் குரியசெங் கோல்பூட ணங்கோயில்
 பரவுசூர்க்குப் பூடணம்
பயில்செட்டை யினவுடைமைதி ராசபூ டணமாட்சி
 பனுை முதியோர் பூடணம்
சோத்திரங் கிளைதாங்கல் செல்வர்பூ டணம் வாய்மை
 தோந்தவிற் பனர்பூடணம்
சீரான திலகர் வனசதேச பூடணம்
 திருமா நகர்ப் பூடணம்
பூத்திய நினடிக் குயாபத்தியே தக்க
 பூடணமெனச் சொல்வர்காண்
புனவள்ளி தெய்வயா னைக்குமண வாளனே
 போரிவடி வேன்முருகனே.

# ஹாஸ்யம்

முப்பது வருஷத்திற்கு முன் ஒரு முனிஸிபலாபீஸ் உயர்ந்த உத்தியோகஸ்தனொருவன் ரூபாஐந்நூறு திருடி விட்டான். அவன் அந்த ஆபீஸ்மானேஜரின் முன் விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டான். மானேஜர் விசாரணையை நாலைந்து தவணையில் பிரமாதமாக நடத்தினார். உயர்ந்த உத்தியோகஸ்தனுக்குப் பெருந்தண்டனை கிடைக்குமென்று எல்லோரும் எண்ணியிருந்தனர். உண்மையில் வழக்கும் அப்படிப்பட்டது தானே!—இப்படியிருக்கையில், மானேஜர் அந்த உத்தியோகஸ்தனுக்கு ஓர் அணா அபராதம் போட்டார். அதுகண்டு எல்லோரும், "என்ன விந்தையிது, இந்தத் திருடனுக்கு ஓரணா அபராதந்தானா விதிப்பது?" என்று பேசிக்கொண்டு ஆச்சரியப் பட்டார்கள். மானேஜர் அதைக்கேட்டதும், "ஏன் ஆச்சரியப் படுகிறீர்கள்? இவர் திருடியதற்குக் காரணமென்ன? பணமில்லாக் குறைவினாலே தானே? பணமில்லாத இந்தத் தரித்திரனுக்கு ஓரணா அபராதத்தைவிட அதிகமாய் விதிக்கலாமா?" என்று கேட்டார். அவர் இப்படிக் கூறியது கேட்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். உத்தியோகஸ்தன் அவமானமென்னும் பெரியமடுவில் ஆழ்ந்தான். அவன் தலை தொங்கவிட்டு விட்டது. தலையில்லா முண்டம் போலானான். பிறகு ஒருமாதம் வரையில் அவன் வீட்டைவிட்டு வெளியேவராமல் நாணத்தினால் வருந்தினான்.

## விளம்பரம்

## 'கோபம், பாபம், சண்டாளம்.'

---

(1) ஓர் ஊரில் ஒரு பிராமணன் இருந்தான் அவன் வேதாத்தியயனம் செய்தவன், நியமநிஷ்டை தவறாதவன், யோக்கியன். அநேகமாக மற்றவர்களுடைய பேச்சுக்குப் போகாமல், தன் வேலைகளைச் சரிவரச் செய்துகொண்டு செல்லும் இயல்பினன் இவ்வளவு நற்குணங்களையுமுடையவனெனினும், அவனிடத்தில் மிகுதியும் முன்கோபம் குடிகொண்டிருந்தது அது அவனுடைய பலவித நல்ல குணங்களையும் மறைத்து, பொல்லாத குணங்களையே மிகுதியும் வெளியில் எடுத்துக் காட்டுவதாயிற்று

(2) கோபமென்னும் கொடிய துர்க்குணம் ஒன்றே ஒருவனைப் பலவழிகளிலுங் கெடுக்கப் போதுமானதன்றோ? இதைக்காட்டிலும் தீமையைப் புரியத்தக்க வேறு விரோதி இவ்வுலகத்தில் யாருமில்லையல்லவா? இதனாலன்றோ,

"கோபமே பிறவியைக் கொடுக்கும் கொள்கையாம்
கோபமே யறிவினைக் குறைக்குங் குட்டநோய்
கோபமே தாயையுங் கொல்லுந் திண்படை
கோபமே தவத்தினைக் குலைக்கும் பேயரோ!"

என ஆன்றோரும் கூறிப்போயினர். பிறகு,

(3) ஒருநாள் இந்தப்பிராமணன் ஊர்ப்புறத்திலுள்ள ஒரு நதியில் ஸ்நானம் செய்து, விபூதியைத் தேகமெங்கும் அணிந்து கொண்டு, கரையிலுட்கார்ந்து,

காயத்திரி ஜபம் செய்துகொண்டிருந்தான். அப்பொழுது, கொஞ்சதூரத்தில் கப்பால் ஒருவண்ணான் தன் துணிகளை மெல்லெனத் துவைத்துக் கொண்டிருந்தான். இவ்விதமிருக்கையில், வண்ணான் துவைத்தலினால் வெளிப்பட்ட நீர்த்துளி ஒன்று, ஜபம் செய்துகொண்டிருந்த பிராமணன்மீது தெறித்தது. உடனே பிராமணனுக்குப் பிரமாதமான கோபம் வந்துவிட்டது அவன் தலைகால் தெரியாமல், சத்தமிட்டுக் குதித்துக்கொண் டெழுந்திருந்து, "நாயே! பேயே! புத்தியில்லையா உனக்கு? ஏன் என்மீது ஜலத்தைத் தெளிக்கிறாய்? என்னுடைய ஜபத்தைக் கெடுத்தாயே! மடமுண்டமே! உனக்கு இத்துணை அகம்பாவமா? உன்னை என்ன செய்கின்றேன் பார்" என்று சொல்லி, அவனிருக்கு மிடத்திற்கு ஓடிச்சென்று அவனைப் பளீர்! பளீர் என்று ஐந்தாறு அறை அறைந்து, வாய்கொண்டமட்டும் வைதுதீர்த்தபின், தான் போய் மறுபடியும் நதியிலிறங்கி ஸ்நானம் செய்யத் தொடங்கினான்.

வெகுண்டார் முன் யாவும் தோன்றாக்கெடுமன்றோ? அதனாலன்றோ 'முன் கோபக் காரரோ டிணங்க வேண்டாம்' என்ற போதனை பிறந்திருக்கிறது

(4) வாய்த்திறவாமல், பிராமணன் வைதவைகளையும் அடித்த அடிகளையும் பொறுமையுடன் சகித்துக் கொண்டிருந்த வண்ணான், தானும் துவைப்பதை நிறுத்திவிட்டு, ஆற்றிலிறங்கி ஸ்நானம் செய்வதாயினான். அது கண்ட பிராமணன், "அடே! கொழுப்பெடுத்த வண்ணானே! கழுதைத் தடியா! நான் தான் உன்னைத் தொட்டதன் பொருட்டு ஸ்நானம் செய்கிறேன். நீயும்

ஏன்டா ஸ்நானம் செய்கின்றனை ?" என்று கேட்டான் அதற்கு அவன் அடக்கத்துடன், சாந்தமாக, மெல்லிய குரலில், "ஐயா ! பிராமணோத்தமரே ! கோபம் யாருக்கிருக்கின்றதோ அவர்கள் சண்டாளர்களுக்குச் சமதையானவர்கள் என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கின்றேன் கோபம் பாபம், சண்டாளம் என்பதை நீர் அறியீரோ? ஆகவே, நீர் என்னைத் தீண்டியதன் பொருட்டு நான் அவசியம் ஸ்நானம் செய்தே தீரவேண்டியது நியாயமல்லவா ?" என்று பதில் சொன்னான்

(5) இம்மொழிகளைக் கேட்ட பிராமணன் வெட்கித் தலைகுனிந்து, 'ஐயோ ! அநியாயமாய்ப் பிராமணனாகப் பிறந்தும் சண்டாளனானேனே ! இந்தக் கோபம் என்னை அடியோடு கெடுத்துவிட்டதே! என் வீண் ஆரப்பாட்டங்களினால் என்ன பலன்? இவ்வண்ணானுக்கிருக்கும் அடக்கமும், சாந்தமும், உத்தம சாதியிற் பிறந்த எனக்கில்லாமற் போயிற்றே ! என் ஜன்மத்தைச் சுடவேண்டும்", என்று தன்னைத் தானே நிந்தித்து, பின் தெளிவடைந்து, வண்ணானிடம், 'நீ இன்று எனக்குப் போதித்த இந்த அரிய போதனையை நான் என்றும் மறவேன் நீ துணிகளின் அழுக்கைப் போக்குவது போலே என் மனத்தின் அழுக்கையும் போக்கினவனாய்! இவ்விஷயத்தில் எனக்கு நீ குருவாக விளங்குகிறாய்! உன்னால் இன்று நான் தன்யனானேன்" என்று பலவிதமான உபசார வார்த்தைகளைச் சொல்லி, அவனிடம் விடைபெற்றுச் சென்று தன் இருப்பிடம் சேர்ந்தான்

(6) அன்று முதற்கொண்டு பிராமணன், 'ஆறுவது சினம்' என்பதை மனத்திற்கொண்டு, கோபத்தைத் தன்

னிடத்திலிருந்தும் அகல ஓட்டி, சாந்தத்தைத் தன் மனத்தே நிலையாக நாட்டி, யாவரிடமும் கருணைகாட்டி, ஈசனுடைய உபய பாதங்களில் தன் அன்பை என்றும் நீங்காத அணியாகப்பூட்டி, செம்மொழி பூண்டு, செல்லும் வழியறிந்து அடங்கிநடந்து, மேனிலை யடைந்தான்.

"உள்ளங்கவர்ந் தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க"
"உள்ளியவெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்!" சுபம்!!

S R கணபதி சுப்ரமண்ய அய்யா,
தமிழ்ப் பண்டிதர்,
போர்டு ஹைஸ்கூல், கொள்ளேகாலம்

## பிரார்த்தனை

(1) சென்றவொரு பசுவதனைக் கன்றெதிர் பார்த்திடல் [போல்
தினமுமெதிர் பார்த்திடுமென் சிந்தை மகிழ்கொள்ளக்
குன்றெறிந்த வேன்முருகன் என்று வருமென்று
குறமகளிர் போல ஒரு குறி சொல்லு பல்லி

(2) படரவொரு பற்றற்ற பசுங்கொடிபோ லுள்ளம்
பரிதவிப்ப தொழிந்து நல்ல பதம்பெறுமாறந்தச்
சுடரிலைவே லையனெதிர் தோன்றிடுவதென்று
சுத்த நிலை நின்றுகுறி சொல்லுசிறு பல்லி

(3) காலகண்டனைக்கண்ட பாலகனைப்போலக்
கண்ணபிரான் கருணை கண்ட பெண்ணரசிபோல
வேலவனைக் கண்டுமகிழ் காலமெது சொல்லு
வேண்டும் வாகவியன்பு விரும்பிச் சிறு பல்லி.

# ஹாஸ்யம் 2.

அப்புவையன் என்றொரு பிராமணனிருந்தான் அவன் தன் மனைவிக்கு அடங்கிய பயபக்தியாய் நடக்கும் மகாராஜன், மனைவி, விரும்பிய போஜனமிட்டபோது தான் சாப்பிடுவான் அவள் வெளியே போகலா மென்று உத்தரவு கொடுத்த பிறபாடுதான் வெளியே போவான். அப்படி பட்ட சாது அப்புவையன். அவனுக்கு தொண்ணூற்றைந்து வயது நிறைந்த ஒரு தாயாரிருந் தாள் அந்த அம்மாளுக்குக் கண் தெரியாது, காது கேட் கும் அந்த அம்மாளை அப்புவையன் மனைவி கொடும் பாடு படுத்துவாள் அப்புவையன் மெச்சிக் கொள்ளும் படி அவள் தன் மாமிக்கு வஞ்சகமாகப் போலி உபசா ரஞ் செய்வாள் அவள் என்ன செய்தாலும் மாமியம் பொறுத்திருப்பாள் பொறுக்க முடியாத சில சமயம் தன் மகனிடம் இரகஸ்யமாய் "அப்பா உன் மனைவி இப்படிக் கொடுமை செய்கிறாள்; நீ நான் சொன்னதாகக் கண்டு கொள்ளாதே' கண்டுகொள்ளாமல் எப்படி நல் வழிக்குக் கொண்டுவரவேண்டுமோ அப்படி நலவழிக்குக் கொண்டுவா. நான் சொல்லிக் கொடுத்ததாகத் தெரிந் தால், என்னைக் கஷ்டப்படுத்துவதோடிராமல் உன்னை யும் கஷ்டப்படுத்துவாள். அதனால் வீண் சண்டையும் விளையும்" என்று கூறுவாள்.

அப்புவையனும், "அம்மா, அப்படியே கவனிக்கி றேன்" என்று கூறி மனைவிக்குப் பலவிதத்தில் இதஞ்

சொலலிவருவான. அபபுவையன எபபடி இதவசனங கூறினலும அவள் தன போககிலேயே இருபபாளே யனறிச சறறும கிழவியினிடம இரககங கொளளமாட் டாள.அபபுவையன,சிலசமயம "அமமாளசாபபிடடாளா, விசாரிததாயா ?" எனறு கேடபதுணடு கேடடால, அவள, "நான பததுத தடவை விசாரிததாயவிடடது. பசியிலலையாம ; வேணடாம எனகிறுள வேணடுமானல உஙகளெதிரில கேடகிறேன" எனறு கூறிப பரபரபபாக ஒரு மூலையிலே சயனிததுக கொணடிருககும மாமியா ரிடமபோய, வெகுமெதுவாய, "அமமா கொஞசம பால வேணடுமா" எனறு கேடபாள. அவளுககுப பால பிடிக காது. ஆகையினல அவள, பலமாய "வேணடாமடி யமமா" எனறு கூறுவாள அபபுவையன மனைவி உடனே தன கணவனைப பாரததுக "கேடடுக கொணடீர்களா ? நான சொனனல உஙகளுககு நிஜமெனறு படுவதிலலை" எனறு கூறுவாள அவன அவள பேசசைச நமபுவான

இபபடி நடநதுகொண்டிருககையில, ஒருநாள, அப புவையன மனைவி அவள மாமியைப பெருமபாடு படுததி விடடாள. மாமி அதைதத தன மகனிடம வெகு இரகக மாயச சொலலி, "எனனை எஙகேயாவது குளஙகுடடை களிலே தளளிக கொனறுவிடு ; உனககுப புணயமுணடு" எனறழுதாள. அபபுவையன தன தாயாருககுத தகக சமாதானஞ சொலலித தேறறிவிட்டு, தன மனைவியை யுகதியினல வெலலவெணணத தீரமானிததான.

பினபொரு நாள, காரியததினல நாணயம செய்து ஒரு செமபு நிறைய நிரபபி வாயை மூடி முததரிதது அதைதத தன தாயின தலைமாடடில வைததுவிட்டான. அவன மனைவி அதைக கண்டதும கிழவிககுத தெரியா

மல் மெதுவாய் எடுத்து வந்து கணவனிடம் காட்டி "இது என்ன?" என்று கேட்டாள். அப்புவையன், "இது ஒரு காரியந்தான்" என்றான். அவள், காரியம் என்றால் என்ன என்று கேட்டாள். அப்புவையன் "அம்மாள் நூறு ரூபா ஒரு பிராமணனுக்குக் கடன் கொடுத்திருந்தாள். அதைக் கேட்டு வாங்கச் சொன்னாள்; வாங்கி வந்தேன். அதை அப்படிப் பத்திரப் படுத்தித் தன்னிடம் வைக்கும்படி அம்மாள் சொன்னாள். அதனால் அப்படிச் செய்துவைத்திருக்கிறேன். அம்மாள் இன்னும் எத்தனையோ பேருக்கு இப்படிப் பணம் கொடுத்திருக்கிறாள். அவற்றையெல்லாம் கேட்டு வாங்கவேண்டும். அம்மாளுடைய பிராணன் போய்விட்டால் அவையெல்லாம் வருவது கஷ்டம். ஆகையினால் அம்மாளுக்கு வேளை தவறாமல் அன்னம் படைத்து அவளுக்கு வாய்க்கு வேண்டியதைக் கொடுத்துக் காப்பாற்று" என்றான்.

அவள் அதைக்கேட்டுச் சந்தோஷமடைந்து அந்தச் செம்பை மாடியின் தலைப்பக்கத்திலேயே கொண்டுபோய் வைத்துவிட்டாள்; பிறகு கிழவிக்கு வேளை தவறாமல் உணவிட்டு என்றுஞ் செய்யாத உபசாரங்கள் செய்துவரத் தலைப்பட்டாள். இப்படியிருக்கையில் ஒருநாள் கிழவி மாரடைப்பினால் இறந்துவிட்டாள். கிழவிக்குச் செய்யவேண்டிய அபரக்கிரியைகளை அப்புவையனும் அவன் மனைவியும் மனமொத்து வெகு நன்றாய்ச் செய்தார்கள். பிறகு ஒருநாள் அப்புவையன் மனைவி கிழவிவைத்திருந்த செம்பை எடுத்து முத்திரையைப் பெயர்த்து ஆசையோடு ஒருதட்டில் கொட்டிப் பார்த்தாள். அதிலிருந்த நாணயம் ஒருமாதிரியாயிருக்கக் கண்டு "இது என்ன இப்படி இருக்கிறதே, காரியமா?" என்று நாயகனைக் கேட்டாள்.

அவன் நகைத்து, "நான் அப்பொழுதே சொல்லவில்லையா இது ஒருகாரியம் என்று' இது காரியந்தான்" என்றான் மனைவி "எப்படி?" என்றாள். அவன் "உன்னை வழிப்படுத்தும் காரியந்தானிது'" என்றுகூறி, "நீ என

அனனையைப படிததிவைதத பாடுகளெல்லாம நானறிவேன! அதனுலேதான உனககு இநத ஆசைகாட்டி என அனனைககுச சாகிறகாலததில செளகரிய முணடாககினேன. நீ இனி எனனை எனன செய்யமுடியும்? ஏதாவது ஏறுமாருக நடநதால, ஸநநியாஸம கொணடு உனனைச சோறறுககுத திணடாடவைபபேன்" என்று மிரட்டி அனுபபினன

## பழமொழிகள்

1 அகல விருநதால நீள உறவு, கிட்டவிருநதால முட்டபபகை

உறவினா ஒருவாககொருவா அதிகமாய நெருஙகிப பழகுவது அவவளவு சிறபபுடையதாகாது எனபது இதன கருதது.

2 பிளளை பிறககிறதறகு முன்னே தினனுபபாா மருமகள் வருவதறகு முனனே கட்டிபபாா

பிளளைகள பிறநதுவிட்டால பிறகு எதையும அவாகளுககுக கொடுககத தோனறுமே ஒழிய பெறறவாகட்குத தாமுணண மனமவராது இது ஒரு கருதது இதனையனறிப பிளளை பிறநதால அநத தேகசெளகரியததிற கேறறபடி தாய உணவு உடகொளளவேணடியது அவசியமாகையினுல அககாலததில கணடதை விருமபி மனமபோனபடி உணபது கூடாது தினறல, தாயின பாலருநதும குழநதை நோயினுல வருநதுமெனபதிலையமிலலை இது மறறொரு கருதது

மருமகள வருவதறகு முனனே கட்டிபபாா எனபது, மருமகள வநதுவிட்டால விலையுயாநத வஸதிரமுடுததுககொணடு அழகு செயதுகொளள மாமிககு மனம வருவதிலலை ஆகையினுல உடுபபதும பூணபதும மருமகள் வருவதறகு முனபே செய்துகொளள வேணடுமெனபதாம.

## ஸ்ரீமான வி. ரங்கவடிவேல முதலியார்
### அவாகள பி. ஏ., பி எல.,

உலகததிலே பலகோடிப பிறவிகள தோனறுகின்றன. அவறறுள "அரிது அரிது மானிடராதலரிது" என்று பெரியார கூறியுளளபடி மானிடப பிறவி வாயபப தரிதாம ஆதலின மானிடப பிறவிவாயபபது பெரும புணய வயததென்றுயிறறு. புணயததின பயனைக வாய்ததிடும அநதப பிறவியில், ஒரு விசேஷங கூறுவ துணடு மககளாயப பிறநதால புகழுககு ஏதுவாகிய குணஙகளோடு பிறககவேணடும அபபடிபபடட குண மிலலாமல உலகததில பிறபபதிலும விலஙகாகப (மிருக மாக) பிறததலே நலலது.

இதனை,

" தோனறிற புகழொடு தோனறுக அஃதிலார
தோனறலிற றோனறாமை நனறு "

என்று தெய்வப புலவராகிய திருவள்ளுவா கடடளையிட டிருபபதனு லறியலாம. ஆகவே இதனுல், புகழுக குரிய குணஙகளிலலாதவன விலஙகினும கேடானவ னுகிறுன என்று தெரிநதுகொணடோம எபபடி ?—

புகழுககு ஏதுவாகிய குணமிலலாதவனை உலகம அருளிலலாதவன என்று கூறுகிறது ; அனபிலலாதவன எனகிறது, தாட்சண்யமிலலாதவன எனகிறது. ஆனுல இபபடி மிருகஙகளை இகழுவதிலலை ஆதலின புகழுககு ஏதுவாகிய குணமிலலாதவன மனிதனுயப பிறததலி லும மிருகமாயப பிறததலே நலலதென்று சொல லியதாம.

மானிடப பிறவியின இநத இலக்ஷணம அமையப புண்யஞ் செயதவா ஸ்ரீமான ரஙகவடிவேல முதலியார. இவா 1876 வது வருஷம ஜூன மாதம 10-நதேதி

பிறநதார இநத உததமகுண சீலரை மைநதரா யடை
யும புண்ணியஞ செயதிருநதவர காஞசீபுரம கிருஷ
ணசாமி முதலியார எனபவர இவர காஞசீபுரம
வேளாள வகுபபைச சேரநதவர, சைவர் ஆனுல
சைவம வைஷ்ணவம எனகிற பேதம பாராட்டாதவர
அதனுலேயே இவர தமது அருநதவப புதலவருககு
ரஙகவடிவேல முதலியார எனறு திருபபெயரிட்டனர
எனறு தெரிகிறது அனறியும, இவர மதராஸ் ரயிலவே
கமபெனியில இஞஜினீயர இலாகாவிலபெரிய உததியோ
கததி லிருநதபோது, கோயமபுததூரககு அருகேயுளள
காரமடை யெனகிற ஊரிலிருககும ஸ்ரீ ரஙகநாதா கோயி
லில திருபபணி செயதிருககிறார. இதனை யலலாமல
அநத ஸ்தலததிலே இரதோறசவம நடககுமபோது
இவர்களுடைய உபயம ஒனறு நடநதுவருவதாகவும
தெரிகிறது ஆகையினுல முதலியாரவர்களின தநதை
சைவவைஷ்ணவ பேதமிலலாத சிறநத தெயவ பகத
ரென அறியலாமேனும், தாயாராகிய மாதுஸ்ரீ சௌபாககி
யமமாள அவர்களும கணவன முதல பநதுககளிருககவுளள
இனததவரககும பிறரககும நடநது கொளளவேண்டிய
முறைபபாட்டினபடி நடநது எலலோராலும நனகு மதிக
கததககுநத பாககிய சீலர

"தநதை மகறகாறறு முதவி யவையதது
முநதி யிருபபச செயல"—எனறு

தமிழ வேதம கூறுகிறது அநத வேதவாககைக கடைப
பிடிதது, கிருஷ்ணசாமி முதலியார தமது மைநதர ரஙக
வடிவேல முதலியாரைத தகக பருவததில கலவி பயில
வைதது அவவிஷயததில சிரததை பாராட்டி அவரை
முனனுககுக கொண்டுவநதார இது இவருடைய தாயா
ருககு "ஈனறபொழுதிற பெரிதுவககுந தனமகனைச
சானறோனெனக கேட்ட தாய்" எனகிறபடி பேரானநதத
தை யுண்டாககிறறு.

ஸ்ரீமான ரஙகவடிவேல முதலியார, நாடக மேடை
களெலலாம சநதோஷமடைய அழகிலும, ஆகிருதியி

லும், குணத்திலும், படிப்பிலும் தேர்ச்சிபெற்றார். இவர் முதலில் சென்னைச் சிந்தாதிரிப்பேட்டையிலேயே ஒரு பள்ளிக்கூடத்தில் கல்வி பயின்றார் அப்பால் பச்சையப்பன் கலாசாலையில் சேர்ந்தார்; அதன்பின் கிறிஸ்துவக் கலாசாலையிலே சேர்ந்து படித்துப் பி. ஏ. பரீக்ஷையிலே தேறினர், அப்பால் லாகாலேஜில் சேர்ந்து படித்து 1908-வது வருஷம் பி. எல். பரீக்ஷையில் தேறினர். இவர் இரண்டாவது பாஷையாக எடுத்துக்கொண்டு படித்தது ஸமஸ்கிருதமென்று சொல்லக் கேள்வியுண்டு.

பின்னர், முதலியார் ஹைகோர்ட் வக்கீல் பிரஹ்மஸ்ரீ ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவர்களிடமிருந்து வக்கீல் தொழிலில் பழக்கம் பெற்றார் அதற்கப்பால் ஹைகோர்ட் வக்கீல் ராவஸாஹிப் ஸ்ரீமான் பி. சம்பந்த முதலியாரவர்களின் கீழ் வக்கீலாயிருந்து தமது தொழிலை மிக்க கௌரவமாகவும் புத்திசாலித்தனமாகவும் நடத்திவந்தார்

1894-ம் வருஷத்தில் முதலியார் சென்னை, ஸுகுணவிலாஸஸபையில் ஓர் அங்கத்தினராயச் சேர்ந்தார்; அதில் நாடக வகுப்பில் ஒரு பாத்திரமாயிருந்து, நல்ல பேர் பெற்றார் இதுதான் இவரை நாமும் இவ்வுலகமும் புகழ்ந்து பேசுவதற்கு ஆதாரமாயிற்று இதுதான் இவர்க்குப் புகழுடம்பைத் தந்தது. இவருடைய புகழ் தமிழ் நாடேயன்றி, ரங்கூன் பினங்கு, சிங்கப்பூர் நேடால் இலங்கை முதலிய இடங்களிலும் பரவியுள்ளது இவரிருந்த நாடகஸபை இலங்கையிலேபோய்ப் பலமுறை விளையாடியிருக்கிறது. அச்சமயங்களில் முதலியார் அந்நகரவாசிகளுடைய அன்புக்கும் ஆசீர்வாதத்திற்கும் பாத்திரமாயிருந்து பிரமுகர்களிடம் தக்க ஸன்மானமும் பெற்றிருக்கிறார் பெரியோர்களுடைய ஆசீர்வாதத்திற்குப் பாத்திரமாவதும் பலபேருடைய மனமகிழ்ச்சிக்குக் காரணமாவதும் பெரும்புண்ணிய வயத்தில் அமையத்தக்கனவேயன்றி எளிதில் அமைவனவன்று. முதலியார் சுமார் முப்பது வருஷகாலம் நாடக பாத்திரமாக இருந்திருக்கிறார். இந்த

முபபது வருஷகாலஙகளுள ஏதோ ஒனறு இரண்டு தவிர மறற நாடகஙகளி லெலலாம கதாநாயகியாகவே நடித்து ஸபைககுப் பெருங கௌரவந் தநதிருககிறா. இவா எபபடி ராவ்ஸாஹிப பி ஸமபநத முதலியாரை அடுத்து வககில தொழிலபுரிநது வநதாரோ அவ்வாறே நாடகத்திலும, நாடக நாயகனென விளஙகும அவரையே அடுத்து விளையாடிவநதாா இது ஒரு அதிசயமான அமைபபு! இதனையனறி இவவிருவரும ஸபைககு நாள தவறாமல வநது தஙகளுககு ஸபையில ஏறபட்ட தொழிலை முறைபபடி கவனிககும நோமையைய பலரும புகழுவாாகள ஸபையில நடத்திய தமிழ நாடகஙகளில ஏதோ சிலவறறைத தவிர மறறநாடகஙகளி லெலலாம, இவ்விருவரே நாயக நாயகிகளாக இருநது நாடகததைச சிறபபிததிருககினறனா. "இனறையதினம, ரஙகவடிவேலும சமபநதமும, நாடகததில தோனறுவாாகளா?" எனறு கேட்டுக கொண்டு பிறகு ஜனஙகள நாடகததைப பாாககப புறபபடுவாாகள. இதனை நாம ஒருமுறை திருநெலவேலிககு ஸபை சென றிருநதபோது கவனிததோம

கதாநாயகியாகவோ நாயகனாகவோ வருகிறவாகள ரஸிகராகவும, நலரூபமுடையவராகவும, கௌரவமுள்ளவராகவும், கானவிதயாபாரஙகதராகவும், வாகமிகளாகவும தயை தீரததுவம இனசொல முதலியகுணஙகள நிரமபியவராகவும இருககவேணடு மென நாடக இலககணம கூறுகிறது கதாநாயகியாக வருகிறவாகளுககு முககியமான இநத இலக்ஷணஙகளோடு பரதநாட்டிய முறையுந தெரிநதிருககவேண்டு மெனறு பெரியாா கூறுவா. முதலியாரவாகளிடம இவறறில பெருமபானமையும அமைந

நாடகசாலையானது ஜனஙகளுககு நனமை தீமைகளை அறிவுறுத்தும ஒரு விதயாசாலைபோ லிருககவேண்டு

மென்று பெரியார் கூறுவர். ஸுகுணவிலாஸ ஸபைக்கு இந்த இலக்ஷணம் அமைவதற்குக் காரணபூதரா யிருந்தவர்களில் இவரையும் ஒருவராகச் சொல்லலாம். நாயகநாயகிகள் ஸ்ருங்காரரஸப் பிரதானமான நாடகம் விளையாடுங் காலத்தில் தாங்கள் ஒருவர்மேல் ஒருவர் கொண்ட காதலைப் பிரகாசமாய், எனக்கு உன்மேலாசை, காதல் என்று வெளியாய்க் கூறுவது கூடாதென்றும் அப்படிப் பேசுவது இயற்கைக்கு விரோதமென்றும் அது சப்தத்தினாலே காட்டிக்கொள்ளக் கூடிய விஷயமல்ல வென்றும் எப்போதும் திருஷ்டிகோசரத்தி லுண்டாகும் பாவங்களினால் ஏற்படக் கூடிய விஷயமென்றும் ரூபத்தினாலோ, கானத்தினாலோ விதபத்தியினாலோ ஸ்தானத்தினாலோ நடையுடை பாவனைகளினாலோ தானே உண்டாய் விருத்தியடைந்து அழியக் கூடிய தென்றும் நாடக இலக்ஷண முணர்ந்த பெரியார் கூறுவர். இந்த இலக்ஷணம் இவ்வாறாகக் கண்டு மகிழ்ந்த நாடகாபிமானிகள் பலருண்டு.

நாடகத்தை வசனரூபமாக நடத்துவதே முற்கால வழக்கமாகத் தெரிகிறது. ஏதோ சில சில இடங்களில் பாடல்கள் சேர்த்து நடத்துவதுண்டு. ஆனால் இப்போது கதாசந்தர்ப்பத்தை விடாமல் பொருத்தனு செய்ய மாத்திரம் வசனமும் மற்றப்படி முழுவதும் சங்கீதமுமாகவே நடத்திவருவதைக் காண்கிறோம். இந்த முறையில் அநேகர், பாட்டைப் பாடித் தங்கள் சங்கீத சாமர்த்தியத்தை முழுவதும் நாடகமேடையில் காட்ட முனைவருகின்றனர். இதில் பின்பாட்டுக்காரர் வேறு ராக ஆலாபனஞ் செய்கின்றனர். இதனால் வீண் காலப்போக்கு ஏற்படுகிறது, நாடகாபிமானிகளின் கவனத்தை வேறு வழியிலே இது திருப்புகிறது; நாடகரஸத்தைக் கெடுக்கவும் செய்கின்றது. இவ்வாறு நாடகம் நடத்துவது முறையல்லவென்பது பற்றி, தென் இந்தியாவில் பேர்போன நாடக பாத்திரராக விளங்கிய காலஞ்சென்ற ஸி. கல்யாணராமய்யரவர்கள் பின்வருமாறு எழுதியுள்ளார்—

"நாடகமென்பது (Reproduction of Nature) ஈசுவர ஸ்ருஷ்டியில் சுபாவமாக ஏற்பட்ட பிராபஞ்சிக தருமங்கள் சுகதுக்கங்கள், சோகங்கள் பிரிவுகள் முதலியவற்றை அவை போலவே நடித்துக் காட்டுவதுதான். ஜனங்களின் உலக நடை முழுவதும் வசனரூபமாக விளங்குகிறதே யல்லாமல் சங்கீதத்திலல்ல. சிங்காராதி நவரஸங்களும் விவகாரதெசையில் வருகையில் ஒன்றையொன்று சார்பாகக் கலக்கும்போது அநேக பேதங்களை அடைகின்றன, அந்த ரஸங்களாகின்றன இந்த ரஸஸ்தாயீ பாவங்களைத் தனித்தனியே உண்மையாய் நிரூபணஞ்செய்ய உலகநடையாயுள்ள வசனத்தினால்தான் கூடும். ஒரு ஜீவனின் ஒரு நிமிஷங்கூட ஒரே நிலையிலிருப்பது ஸாத்தியமில்லையென்பது திண்ணம். அநேக விதமான பிரவிருத்தி நிவிருத்தி, சுகம், துக்கம், விருப்பு, வெறுப்பு இவற்றைப் பிரதிக்ஷணங்களிலும் தாமதியாமல் மாறி மாறி வெளிப்படுத்தவேண்டிய ஒரு நாடகபாத்திரம் சுருதிக்கும் தாளத்திற்கும் பின் உதவிப்பாட்டிற்கும் காத்திருந்தால் எப்படி ஸபையிலுள்ள ரஸிகர்களுக்குத் திருப்தியாகும்? நாடக பாத்திரங்களின் மனநிலையும் சபையோர்களின் மனநிலையும் அபேதமாய் ஒன்றாகிக் கலந்து சிரித்தால் சிரிக்கவும் அழுதால் அழவும் வெறுத்தால் வெறுக்கவும் ஏற்படும்போதல்லவோ நிஜானுபவ நிரூபணை ஏற்படும்? நாடகமத்தியில் காரணமில்லாமல் ஒரு நிமிஷம் தாமதித்தாலும் சபையோர்களின் மனப்பற்று மாறிவிடும். சுருதியை விட்டாலும் தாளத்தை விட்டாலும் அதிசங்கதி போட்டாலும் சபையோர்களின் மனப்பிடிப்பு நழுவுமென்பது நிச்சயம். பின்பாட்டு ஒற்றுமையில்லாமற் போனாலும் மறுபடி சபையோர் மனதைக் கவாசிசெய்வது அதாவது பூர்வ அநுபவ நிலைக்குக் கொண்டுவருவது சாத்தியமல்ல."

குறிப்பு:—நாடக பாத்திரங்கள் இத்தகைய நாடக இலக்ஷணங்களை உணரவேண்டுமென்றே இதனை ஈண்டெடுத்துக் காட்டினோம்.

ஸ்ரீமான் ரங்கவடிவேல் முதலியாரவர்கள் அப்படிப்பட்ட குற்றத்திற்கு இடந்தராமல் வெகு ஒழுங்காய் நடித்துவந்தனரென்று பெருமைப்படுத்திப் பேசுவது மிகையாகாது. முதலியார் அவர்களுக்கு வயது நாற்பத்தெட்டானாலும் அவர் பார்வைக்கு முப்பது வயதினராகக் காணப்படுவர். அத்தகைய தேக அமைப்புடையவர் அவர். அவருடைய தலைமயிரில் ஒன்றுகூட நரைத்திராது அவருடைய முகம் சாதாரணமாகவே எவரையும் வசீகரிக்கும் நாடகமேடையிலே நடிக்கும் காலத்தில் இவரைப் பற்றி முன்னரே அறியாதார் இவரை யாரோ பெண்பாலென்றே கருதுவர். பல சொல்வானேன்; "இந்தச் சுந்தர ரூபன் இந்த ஸுகுண விலாஸ ஸபை நாடகமேடை நாயகியாக விளங்கவே பிறந்தவன்" என்று எவரும் புகழ்வர்

முதலியார் முகத்தில் பெண்கட்குரிய பேதைமை தவழும். இவர் எப்பொழுதும் மந்தஹாஸவதன சுந்தரராய் விளங்குவர் இவர்க்கு வீண்பெருமை என்பதே தெரியாது இவர் தம்மைப் பிறர் வாழ்த்தக் கேட்பின் தாழ்த்திக்கொள்வர். தெய்வத்திற்கும் பெரியோர்க்கும் அஞ்சி நடக்கும் சுபாவமுடையவர் இவர் இவர் நாடகமேடைக்குச் செல்லுமுன் தமது தெய்வந்தொழுது செல்வர்; செல்கையில் பெரியாரைக்காணின் வணங்கி மிக மரியாதையுடன் ஆசீர்வாதம் பெறுவர். இவர் ஒரு ஸமயம் ஸீதையாக நடிக்க நேர்ந்தது. அன்று இவர் சுத்த உபவாஸமிருந்து நாடகமுடிந்த பின்பே உணவு அருந்தியதுண்டு. இம்மாதிரியே இவர் வள்ளிநாயகியாக நடித்த சமயமும் செய்தனர். இவர், தம்முன் பேசு

வோா மிகச சிறியரே யாளுனும பெரியரேயாளுனும அவா பேசுவதை மிகப பொறுமையாய்க கேடடுப பின தாம ஏதாவது பேசவேண்டியதா யிருப்பின மெது வாயப பேசுவா; இன்றேல பணிந்து விடைகொளவா.

முதலியாரவாகள எனறும எந்தவேளையிலும பரி சுததமான உடை உடுததுககொணடு தமமைவநது காண பவா தமமைவிடடுப பிரிய மனமிலலாதபடி வாாததை யாடுவாா

> " உவபபத தலைககூடி உளளப பிரிதல
> அனைததே புலவா தொழில "—எனனும

தமிழ வேதவாககின பெருமையை இஙகே கணடு அறி ஞா மகிழவா

1916-ம வருஷம ஸுகுண விலாஸ ஸபை வெள்ளி ஜுபிலி நடநதது அசசமயம செனனை, ஜயவிலாஸ ஸபை அதறகு ஒரு வாழததுமஞசரி பாடி அனுபபியது அதில, சபைச சிறபபு எனற தலைபபில,

வெணபா

> " சததிசம பநதத தனிரஙகஞ சாாநததமிழ
> நததிசம பநதகருஷண நறகானம—ஒதத
> ஸுகுண விலாஸஸபை தொலலுலகில வாழக
> தகுந ருடனசநத தம "

எனறு ஒரு வாழததுக கவி பிறநதிருககிறது. இதில ஸ்ரீமான ரஙகவடிவேல முதலியாா, ஸ்ரீமான சம பநத முதலியாா, பிரமஹஸ்ரீ கிருஷ்ண ஸாமி ஐயா மூவ ரையும புகழநது பேசியிருககிறது

முதலியாரவாகள ஸுகுண விலாஸ ஸபையில நாடகபாததிரமாக இருநது அதனை விளஙகசசெயதது மலலாமல பொககிஷதாராகவும, ஸ்டேஜ்டைரகடராக வும, காரிய தரிசியாகவுமிருநது ஸபையை முனனுககுக கொணடுவநதிருககிறாா. இவா தமது கடைசிகாலததில ஸபையின உதவி அககிராசனாதிபதிபதவியை வகிககக கோநது அதிலும சிறநதபெயாபெறறாா. இனனும இவா செனனை ஜயவிலாஸஸபையிலும அது தோனறியது

முதல் உதவி அக்ராஸனாதிபதியாயிருந்து அவ்வப்போது அவர்களுக்கு வேண்டிய உதவிகளைப் புரிந்து வந்தார்: நாடகத்திலே இவர் கொண்டிருந்த அபிமானமும் அதில் தாமினும் தேர்ச்சியடையவேண்டுமென்று உழைத்து வந்த நேர்மையும் இவருடன் கூடவிருந்து பழகியவர்களனைவரும் நன்குணர்வர்

இவையன்றி முதலியாரவர்கள் (Hindu Good Templars League) மதுவிலக்குச் சங்கத்தில் அங்கத்தினராயச்சேர்ந்து கடைசிக்காலம் வரையில் அதில் தமது கடமையைச் சரிவரச் செய்துவந்தார் 1908-ம் வருஷத்தில் அதற்கு அக்ராசனாதிபதியாயிருந்து காரிய நிர்வாகம் செய்திருக்கிறார். கர்வம், வீண் பெருமை, பட்டோபம் முதலியன இல்லாமல் தமது அந்தஸ்துக்கேற்றபடி நடந்துகொண்டமையினால் முதலியாரவர்களிடம் அச்சங்கத்தினர் யாவரும் அன்புபாராட்டி வந்தார்கள்

இத்தகைய பெருந்தகையாளர், தமது குடும்பமும், கணக்கிறந்த தமது நண்பர்களும் நாடகமேடைகளும் ஏங்கி மனம் நைந்து துக்கமுற, 1923-வது வருஷம் ஜூன்மாதம் 5-ந்தேதி இம்மண்ணுலக வாழ்வை விட்டுச் சகலலோக சரண்யனுடைய திருவடி நிழலை அடைந்தனர் இவரையே இவர்தம் நிழல்போல நீங்கதிருந்து இவரைத் தெய்வமெனப் பாவித்துத் தக்க பணிவிடை புரிந்துவந்த இவருடைய மனைவியாரும் இவருடைய ஏகபுத்திரியும் இவருடைய இரண்டு சகோதரர்களும் இவருடைய பிரிவாற்றாமையை எவ்வாறு பொறுத்திருக்கிறார்களோ அதனை யாரே யறிவர்? ஆ! ஜகதீசா! நீயே அவர்கட்கு ஆறுதலளித்து ஆதரிப்பாயாக!

இவருடைய பிரிவினால் சென்னை ஸுகுணவிலாஸ ஸபை வெகு நஷ்டமடைந்ததென்று கூறுவது மிகையாகாது அந்தோ! என்னென்றியம்புவது! இவரோடிருந்து நாயகனாக நடித்துவந்த ராவலாகிய, ஸம்பந்த முதலியார் அவர்கள் கண்ணும் கண்ணீருமாக உயிரிழந்த உடல்போல தவிப்பதை நாம் கண்ணாலே கண்டோமாத

வினை இத்துக்கம் அவர்க்கு இந்தப் பிறவியிலே மாறுமென்று கூறுவதற்கில்லையானாலும், அவரும் அவரைப்போல ரங்கவடிவேல் முதலியார் அவர்களிடம் அன்பு பூண்டார் அனைவரும், தோன்றுவதும் மறைவதும் மானிடவாழ்விற்கு இயற்கையென்பதை எண்ணித் துக்கத்தை மறந்து தமது பூஜாகாலங்களில்—

இறைவனே! பரம கருணாநிதியே! உலகம் புகழ உடம்பெடுத்த உத்தமகுண சீலராகிய எமது நண்பரை உன்னுடைய திருவடி நீழலில் வைத்து அவர்க்கு நித்தியானந்த வாழ்வை யளித்திடுவாயாக!—என்று பிரார்த்தனை செய்வதே தமது நண்பர்க்குச் செய்யும் கைம்மாறெனக் கருதி நடப்பார்களாக!

பத்திராசிரியர்

---

மக்கட் பிறவியினாலே பெறத்தக்கவை

தாரணியின் மநுவாய முனைத்துளோர் பெற்றதாய்
 தந்தைசொல் கேட்டாரியன்
தருகல்வி கசடறக் கற்றவைக் கேற்றபடி
 தாநின்று லோகவியலின்
காரணமறிந்து தொல்குடிமை வழுவாமனங்
 கண்டுதாளாண் மைமேவிக்
கருதுநல் வழியிற் பொருளீட்டி யுறவரைக்
 காத்துமெய்ந் நூலுணர்ந்து
வேரண விளங்குபதி பசுபாச மூன்றன்
 விதந்தெரிந்தாயந் திருவகை
வினையொப்பு மலபாக சத்திபாதம் பெற்று
 மிக்கதனை யோர்தல் வேண்டும்
பூரண்பவானிசிவ சத்தியம் பிகையுயர்
 பொருப்பரையன் மகள் தநயனே
புனவள்ளி தெய்வயானைக்கு மணவாளனே
 போரிவடிவேன் முருகனே.

## பணத்தாசையின் பயன்

மேல நாடடில பெருமபொருள படைதத சீமான ஒருவனிருநதான அவன பரமலோபி ஆகையினால் அவன தரிததிரனைப போல நடிதது வநதான அவன உடுததுக கொள்ளும உடையிலிருககும தையலை எண்ணமுடியாதெனறு சொலவதுண்டு. அவன உணணும உணவும பரம ஏழையும வெறுககததககபடியாகததானிருககும ஊரில எஙகேயாவது தருமம தானம எனகிற பிரஸதாபம நடநதாலும அவன அஙகே இருகக மாட்டான ஒரு சிறு தொகைவருமபடி வருவதாயிருநதாலும அதறகு மூனறுநாளலல உணணாமறகூடக காததிருபபான அவனை ஒருவரும மதிபபதிலலை

இபபடி யிவன பொருள சேரததிருபபது எபபடியோ அரசாஙகததாருககுத தெரிநதுவிடடது அசசமயம அரசாஙகப பொககிஷததிலும பொருள குறைவாயிருநதது ஆனால தேவை அதிகமாயிருநதது. அரசாஙகததிறகுப பொருள தேவையாயிருநதால பொருள படைதத குடிகளிடமிருநது கடடாயபபடுததிப் பொருள வாஙகலாம எனனும சட்டம அககாலததிலிருநதது ஆகையினால அநதச சடடபபடி அரசாஙகததார ஒரு தேதி குறிபபிடடு இதறகுள இததனையாயிரம ரூபா செலுததவேணடுமெனறு லோபிச சீமானுககு ஓர உததரவிடடாரகள.

லோபிசசீமான எனன செய்வான இபபொழுது? எனன செய்வதெனறு பெரிய ஏக்கததிலாழ்நதான; கடவுளை வேண்டிக்கொண்டான்; அரசாங்க உத்தியோகஸ்

தார்களுக்கு லஞ்சம் கொடுத்துத் தன்னை ஏழை யென்று சொல்லித் தப்புவிக்கும்படி வேண்டினான்; இன்னும் பல வழிகளிலும் முயற்சி செய்தான். ஒன்றிலும் பயன் படவில்லை. கடைசியில் லோபி தன்னிடத்திலே இருக்கும் பணத்தை யெல்லாம் பூமிக்குள்ளே சேமித்து வைக்கத் தீர்மானித்து, ஒருவருக்குந் தெரியாமல் தன் வீட்டிலோர் மூலையிலே இராவுக்கு இராவாய் வேலை செய்து ஒரு பெரிய நிலவறை ஏற்படுத்தினான். அந்த நிலவறைக்கு மேற்பக்கம் கதவும் அக்கதவுக்கு மேற்பக்கத்தில் பூட்டிக் கொள்ளும்படிக்கும் வேலை செய்திருந்தது.

சீமான், அரசாங்கத்தார் பணஞ் செலுத்தும்படி தனக்கு உத்தரவு பிறப்பித்திருந்ததற்கு முதல்நாளே, தன்னிடமிருந்த பணத்தை யெல்லாம் ஒரு பெட்டியிலே போட்டு அதை நிலவறைக்குள் பத்திரப்படுத்தித் தானும் அதற்குள்ளே போய் ஒளிந்துகொண்டான். உத்தரவிட்டபடி தங்களுக்குப் பணம் வந்து சேராமையினால் அரசாங்கத்தார் அந்த லோபி சீமானைப் பிடிக்கவந்தனர்; அவன் வீட்டிலில்லாமற் போகவே கெடுகலுந் தேடினார், அவனை எங்கும் காணாமையினால் அவன் வீட்டைச் சோதனைபோட்டனர். அந்த வீட்டில் தமக்குக் கிடைத்த சாமான்களையும் வேறு சில பொருள்களையும் அந்த வீட்டையும் ஏலம்போட்டு அரசாங்கத்தார் பறிமுதல் செய்துகொண்டனர். ஆயினும் அவர்கள் எதிர்பார்த்தபடி பொருள் கிடைக்கவில்லை. அதனால் அவர்கள் லோபி பொருளோடு எங்கேயோ வெளிநாட்டுக்கு ஓடிவிட்டானென்று தீர்மானித்துவிட்டனர்.

இப்படியாகவே சில நாட்களுக்குப் பிறகு அந்த வீட்டை ஏலத்திலெடுத்தவன் அதை இடித்துப்போட்டுப் புதிதாகக் கட்டத்தொடங்கினான். அப்பொழுது வேலைக்காரர்கள் எல்லாவற்றையும் இடித்துக்கொண்டு வருகையில், ஓர் மூலையில் நிலவறைக் கதவு அவர்களுக்குத் தென்பட்டது. அதை அவர்கள் அதிக ஆச்சரி

யததுடன தஙகள் எஜமானனை வரவழைததது வைததுக கொண்டு திறநதாாகள்; திறநததும அழகிய நிலவறை யொனறைக கண்டாாகள் அதிலிறஙகிப பாாக்கும்படி எஜமான அவாகளுக்கு உததரவிட்டான. அவ்வாறே செய்யும்போது பெரிய இருமபுபபெட்டி யொனறு அகபபட்டது. அதை அவாகள பெரும பிரயாசைப பட்டு வெளியேற்றினாாகள பினனும பாாககையில அஙகொரு பிரேதமிருநதது. அநதப பிரேததகை உறறுபபாாககையில அது தன வலதுகாததை வாயிலே கவிச சதைதயைக கடிததுககொணடிருநதது ஆச சரியபபட்டு வேலைககாராாகள் தஙகள எஜமானனை அதறகுள வரவழைததுக காட்டினாா எஜமான பாாததது அவனிடடுக்கடையவனுயிருநத லோபிச சிமான எனறு தெரிநதுகொணடான பிறகு பலா அவ விடம வநதுபாாததுப பரிதாபபபட்டனா, அவன எப படி இறநதிருபபானெனறு பலவழியில ஆலோசிததுப பாாததனா, கடைசியில,—லாகாருககுப பணததை ஒளிககசசருதி இநநிலவறை ஏறபடுததியிருககவேண டும பணததை யெலலாம பெட்டியிறபோட்டு இதி லிறககி அவனதானும இதிலிறஙகி யிருககவேணடும. இதனகதவு வெளிபபககம தானே தாளிட்டுக கொளளத தககதா யிருககிற படியினுலே இது மூடபபட்டதும பூட்டிக கொணடிருககவேணடும பிறகு வெளிவரப பலவழியில இவன முயறசி செயதிருபபான. முடியாமற போகவே தன சதைதயைததானே கடிததுத தினறு இறந திருகக வேணடும” எனறு தீாமானிததனா.

அநதோ! பணததாசை செயயும கொடுமைகளைப பாாததீாகளா! ஆதலின,

> தனநதேடி யுணணுமற புதைககவேணடாம
> தருமததை யொருநாளும மறககவேணடாம

எனறு கூறியுள்ள மூதுரைகளைக கவனியுஙகள். அவற றின கருததறிநது நடவுஙகள.

உ

செந்திலாண்டவன் திருவடி துணை

# பாலவிநோதினி

அல்லது

## குழந்தைகளின் அன்பன்

ஒரு மாதாந்தப் பத்திரிகை

தொகுதி 5 | 1923ஆ செப்டம்பர் | பகுதி 9

### தெய்வ வணக்கம்.

உககோடி முடிவின் மண்டிய சண்டமாருத
முதித்ததென் றயனஞ்சவே

ஒருகோடி யண்டரண் டங்களும் பாதாள
லோகமும் பொற் குவட்டும்

வெருகோடி மலைகளு மடியினிற் கோத்திரு
விசும்பிற் பறக்கவிரிநீர்

வேலை சுவறச்சுரர் நடுக்கங் கொளச்சிறகை
வீசிப் பறக்குமயிலாம்

நககோடி கொண்டவுணர் நெஞ்சம் பிளந்ததா
கேசரி முராரி திருமால்

நாரணன் கேசவன் சீதரன் தேவகி
நந்தனன் முகுந்தன் மருகன்

முககோடி நதிகரன் குருகோடி யநவரத
முநிவருலவு நீலகிரிவாழ்

முருகனுமை குமரனறு முகனடவு விகடதட
மூரிக்கலாப மயிலே

அருணகிரிநாதர் அருள் வாக்கு

# ஹிதோபதேசம்.

1 "காகமுட்கார்ந்ததும் பனம்பழம் விழுந்தது" என்பதுபோல் ஒருவன் தெய்வச் செயலாய்ப் புதையலைக் காணலாம் ஆனால் அதனைத் தெய்வமே எடுத்துக் கொடுக்குமா? எடுத்துக் கொடாது. தெய்வம் காட்டுமே ஒழிய ஊட்டாது ஆதலின் அதை உன் முயற்சியினாலே நீ பெறவேண்டும்

2 ஒவ்வொருவரும் முயற்சியோடிருக்க அவசியம் முயற்சியின்றி ஒன்றும் கைகூடாது சிங்கம் மிருகராஜன்தான், ஆயினும் அது தன் குகையிலே தூங்கிக்கொண்டிருந்தால் அதன் வாயில் (யானை முதலிய மிருகங்கள்) இரை வந்து புகுமா? ஒருகாலும் புகாது. ஆதலின் முயற்சி இன்றியமையாதது.

3. ஸூரியோதயம், அன்புள்ள தந்தை, தாம்பூலம், பாரதக்கதை, அன்புள்ள மனைவி, உண்மை நண்பன் இவர்களை எத்தனைமுறை கண்டு மகிழ்ந்தாலும் தினம் தினம் புதிதாகவே இன்பமளிப்பவர்களா யிருப்பார்கள்- அதிசயம்!

---

## விடுகதைகள்.

1. எங்களப்பன் சொரியன்-எங்காத்தாள் சடைச்சி-நான் சக்கரைக்குட்டி-இது என்ன?

2, ஒரு காண்டி மாவிலே ஊரெல்லாம் கல்யாணம்? இது என்ன?

# கற்பின் மகத்வம்

ஆத்திசூடி என்கிற அழகிய சிறு நூலில் நமக்கு வேண்டிய உபதேசங்களைச் செய்தருளியவர் ஒளவையார் என்கிற ஞானத்தாயார். இவர்களுடைய மகிமை பெரிது. இவர்கள் சமயத்துக்குத் தக்கபடி அநேக தனிக்கவிகள்பாடி மக்களுக்குவேண்டிய போதனைகளைச் செய்திருக்கின்றார்கள் அவைகளை* ஒளவை அருந்தமிழ் என்கிற நூலிலே விரிவாய்க்காணலாம்.

இவர்கள் இன்பம் எது என்று கூறவந்தபோது

" ஈதல் அறம் தீவினைவிட் டீட்டல்பொருள் எஞ்ஞான்றும்
காதலிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே இன்பம் பரனை நினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு—

என்றுபாடி விளக்கியருளினார்.

இந்தக் கவியில், காதலிருவர் கருத்தொருமித் தாதரவு பட்டதே இன்பம் என்று கூறிவிட்டபடியால், நாயகனும் நாயகியும் மனமொருமித்து வாழ்வதே இன்பம் என்று நாமறியலாகும் அவர்கள் மாறுபடுவார்களா

---

* ஒளவை அருந்தமிழ் விலை அணா 12.
வரகவி-திரு. அ. சுப்ரமண்ய பாரதி இயற்றியது.

னால உலகவாழ்வில் அளவற்ற துனபமுண்டாம். நாய
கன நாயகியை வெறுபபான நாயகி நாயகனை வெறுப்
பாள. எப்போதும வீட்டில சண்டை சசசரவே மிகுந
திருககும. இருவரில யாரேனும ஒருவா மனமபொறுத
துப போவாரானால ஒருவாறு வாழ்வு இனிதாய்
நடைபெறும நாயகி கெட்ட சுபாவ முடையவளா
யிருநது நாயகன அவளை அநுஸரிதது நடபபானானால
இருவரும கொடிய பாபததிறகாளாய நரகததிறகுப
பாததிராகளாக நேரிடும. நாயகன கெட்ட நடவடிககை
யுடையவனாயிருநது அவனை நாயகி அநுஸரிபபாளா
னால நாயகிககு அதனால பாபமொனறுமே நேராது
கணவன எபபடியிருநதாலும நாயகி அவனைப பழிககா
மல அவனை அநுஸரிததே நடககவேணடுமெனபது பதி
விரதா தாமம மேலும நாயகன செயயும புணணிய
காமஙகளில நாயகிககுப பாததியமுணடு எனறும ஆனால
அவன செயயும பாபகாயஙகளிலே பாததியமிலலை யென
றும மநுதாம சாஸ்திரம கூறுகிறது இதனை
யனறி நாயகி தன கறபைக காதது வருவாளானால நாய
கன எவவளவு தீயவனாயிருநதாலும அவன சகல சுகா
தஙகளையு மடைவான எனறும ஆனறோா கூறியிருககின
றனா பாணடவாகள அஞஞாதவாசம நடததுவதன
பொருட்டு விராட நகரில பிரவேசிகக ஆலோசிககையில,
தருமபுததிரா பாஞசாலியைப் பாரதது,—

" மாதே ! வேதியா ஒழுககமும், வேந்தா நீதியும்
மாதாகள் கற்பும் பொருந்தியே மாத மும்மாரிபெய்கின்
றது மழையினாலே மாநிலம தழைககிறது. மழையி
னாலே உலகம சகல நனமைகளையும அடைகினறது.

இநத அரிய நனமைகளுக காரணமான கறபுடைய மாதை மணநதவன விறபன விவேகஙகளை யடைவான; அன பும, இனபமும, அழகும, புகழும, அறிவும, ஆறறலும, வெறறியும, செலவமும, சீரும, சிறபபும, திடமும, தீர மும குறைவினறி அடைவான ஆதலின நீ உன கறபைக காபபாறறிககொள நாம சகல சுகிரதஙகளையும அடைய லாம" எனறு புததிமதி கூறியருளினா.

ஆகவே நாயகியின கறபினால நாயகன பாபம நீஙகி நனமைபெறுவது கூடுமெனறு நாம அறியலாமேனம. ஆதலால நாயகி நாயகனை எவவாறறானும அநுஸரிதது நடபபதே சிறநததாம இதனாலேதான, ஔவையார,

"பாததாவுக கேறற பதிவிரதை யுணடானால
எததாலும கூடி வாழலாம—சறறேனும
ஏறுமா றாக இருபபாளே யாமாகில
கூறாமற சநநியாசங கொள"

எனறு போதிததார

இதனை விளககும கதையொனறுணடு அதனைக கவனிபபோம

பிரதிஷ்டானம எனனும ஊரில கௌசிகன என னும பெயாகொணட ஓர அநதணன இருநதான. கணடவா அருவருககததகக கொடிய குஷ்டரோய அவனுககுணடாயிருநதது அதனால அவன கைகால களெலலாம புண்படடு அழுகிச சுருஙகிபபோயின. அவன அருகே சென்றால துாநாறறம சகிககமுடியாமல வீசும

இபபடிபபடட கொடிய நோயாளியாகிய அவ னுக்கு அவன செய்த புண்ணிய வசததால குணவதியான

நலல மனைவி வாயநதிருநதாள அவள் பெயா நளாயனி. அவள அவனிடமஅருவருபபடையாமல அவனையேதான தொழுந தெயவமாக எண்ணி நாடோறும அவனை வெந நீரில குளிபபாட்டி வைபபாள; கைகால கழுவல, கைகால பிடிததல, எணணெய பூசுதல, ஆடை யுடுததுவிடல, வேளை தவறுமல உணடியுதவல, அடிககடி அவனுடலிலி ருநது பெருகும உதிரம, சீழ, மூததிரம, புரீடம முதலி யவறறைக கழுவல முதலியவைகளை வெறுபபொருசிறிது மிலலாமல செயவாள, அவனுடன அனபோடு வாாததை யாடுவாள, அவன சினநது பேசினுலும கோபியாமல பொறுததிருபபாள அவள இவவாறிருபபதை அவன மனதிற சிறிதும கவனிபபதிலலை அடிககடி கோபித துககொளளவான, எரிநதுவிழுவான; அடிககடி அசச முறுததுவான

கௌசிகன, நடகக முடியாதவனு யிருநதபடியால அவன வெளியே போகுமபோது அவனை அவன மனைவி தன தோளினமீது தூககிககொணடு போவாள. அப படி அவனை அவள ஒருசமயம ஒருநாளிரவில அவன விருமபிய ஓரிடததிறகுத தூககிககொணடு போனுள மழைககால மாதலால இருட்டு பயஙகரமாயச சூழநதிருந தது. மழையும சிறிது தூறியது. ஆகவே அவள மின னல வெளிசசததைககொண்டு வழிகண்டு செலல வேண டியதாயிறறு

அநத வழியின சமீபததில மாணடவ்வியா என னும ஒரு முனிவரை அரசாஙகததாா கழுவிலேறறியிருந தாாகள. முனிவா ஒருகுறறமும செயயாத நிரபராதி. அரசாஙகததாா தவறுன விசாரணையினுல அவாமேல

குற்றம சுமததி அவரைத தண்டனைக்குள்ளாககி விட்டாரகள்.

முனிவா எதையும பொறுததுக்கொளளும இயல புடையவராதலால, "வருவதையாரால விலக்க முடியும, வருவது வநதேதீரும" எனறெண்ணித தண்டனையை ஏறறுககொண்டாா அவ்வாறு தணடனைககுளளாய் வருநதும அநத முனிவாமீது, மனைவியினமீது செலலும கௌசிகன அவயவமபடடது படவே அவருடல அசைந ததது அதனால அவா மிகுநத வருததமடைநதமையி னால,—"அநியாயமாக இநத ஆபததுககுட்சிககி வருநதிககிடககுமெனககு மிகுநத நோயுணடாகுமபடி எனனை அசைததவன பொழுதுவிடிநது சூரியனைப பாாததது நாசமடையககடவன" எனறு சபிததாா

முனிவரின இசசாபததைககேடட வுடனே, அந தப பதிவிரதை, "அஙஙனமாயின சூரியனுதயமாகா தொழிக" எனறு சபிததாள அவவாறே சூரியன உதய மாகாமறபோகவே உலகததில எலலோரும வருநதினா உலகமெலலாம இருள சூழநது பயஙகரமாயிருநதபடியால ஜனஙகள தததம தொழில கெடடுத தடுமாறினா

இவவாறு சில நாடகள செலலவே, "அநதோ! இனி உலகம அழியுமபோலும" எனறெணணித தேவாகள பிரமதேவரிடமபோய் வணஙகி இவவாறு நோநததன காரணம யாதெனறும இது எபபடித தீரும எனறும வினவினாகள. பிரமதேவா—"தேவாகளே, ஒரு பதிவிரதையினுடைய சாபததினாலே இவவாறு சூரியனுதியாமலிருககிறது. முனபோல சூரியனுதிகக வேண்டுமாயின நீஙகளெலலோரும அததிரி முனிவரின

மனைவியும் கற்பிற் சிறந்தவளுமாகிய அனுசூயையி
னிடம் சென்று வழிபட்டுப் பிரார்த்திப்பீர்களானால் இதற்
கோர் வழியேற்படும்” என்று சொல்லியனுப்பினார்.

தேவர்கள் அனுசூயா தேவியாரிடம்போய் அந்த
அம்மையாரை வணங்கித் தங்கள் குறையைக்கூறிக்கொண்
டனர். அனுசூயை அம்மையார் மகாபதிவிரதை; தேவர்
கள் வந்து வணங்கினரென்றால் அவர் பெருமையை அள
விடுவதற்காகுமா? அந்த அம்மையார் தேவர்களை நோக்
கி, “நீங்கள் கவலைப்படவேண்டாம். கற்புடையமாதின்
பெருமையும் கெடுவதாகாது. முன்போல இரவும்பகலும்
உண்டாதல் வேண்டும். அக்கற்புடைய மாதின் கண
வனும் உயிர்பெற்றிருத்தல் வேண்டும். அங்ஙனம் செய்
கிறேன்” என்று கூறித் தேவர்களை அனுப்பிவிட்டு நேரே
நளாயனியின் வீட்டுக்குவந்தார்.

அனுசூயை அம்மையாரைக் கண்டதும் நளாயனி
பரமானந்தத்துடன் வணங்கி உபசரித்து வரவேற்
றாள். அனுசூயையார், அவளை ஆசீர்வதித்து, “நீயும் உன்
கணவனும் சௌக்கியமா? உன் தர்மம் சரிவர நடந்து
வருகின்றதா? மாதே, உன் கணவனுடைய முகத்தைக்
கண்ட மாத்திரத்தில் நீ சந்தோஷப்படுகின்றாயா? எல்
லோரையும்விட நீ உன் புருஷனை மேலானவனாகக்கொள்
கின்றாயா? நான் ஏன் இப்படிக் கேட்கின்றேனென்றால்
மாதர்களுக்குக் கற்பொன்றினாலே எல்லா மேன்மையும்
உண்டாதல் வேண்டும். என் நாதனை நான் பூஜித்து வரு
கின்றபடியால் நான் பெரும்பயனை அடைந்து வருகி
றேன். மாதர் தங்களுடைய தர்மத்தை நன்றாய்த் தெரி
ந்துகொண்டு நடக்கவேண்டும்” என்றார்.




நளாயினியின கறபின மகதவம

267-ம பககம பாாகக

கௌசிகன் மனைவி வணங்கி, "தாயே! அந்த தாமம் என்ன?" என்று கேட்டாள். அனுசூயை கூறினாள்—

## மாதராடவர் ஒழுக்கம்

மானிடன் தன் வருணாசிரம தருமங்களுக்கு விரோதமில்லாமல் பொருளைத் தேட வேண்டும். தேடிய பொருளைத் தக்கவழியிலே செலவழிக்க வேண்டும். என்றும் சத்தியமே பேச வேண்டும். தவம், பொறுமை, அருள் இவற்றுடன் கூடியவனாயிருக்க வேண்டும். நாடோறும் புண்ணியகருமத்தையே செய்ய வேண்டும். இவ்வாறு அறநெறி தவறாமல் நடக்கும் ஆடவன் புண்ணிய பலத்தை அடைவான். பிறகு அவன் தன்னுடைய பெரு முயற்சியினால் பிரமலோகம் முதலியவைகளைப் பெறுவான்.

இவ்வாறு மிகுந்த கஷ்டப்பட்டுத் தேடிய எல்லா தருமங்களிலும் அரைப்பங்குப் பயனை அந்த ஆடவனுக்கு வாழ்க்கைப்பட்டு அவனைப் பூசித்துவரும் மனைவி அடைவாள். புருஷனுக்கு அவன் செய்யும் தருமங்களுக்குத் துணையாயிருப்பதைத் தவிர மாதர்களுக்கு வேறு விரதங்கள் கிடையா. நாயகனைக் காப்பாற்ற வேண்டுமென்கிற எண்ணம் ஒன்றிலேயே மாதர்கள் தாம் இச்சித்த உலகத்தை அடைகின்றனர். ஆதலாலேதான் கணவனை வழிபடுவதைப்பற்றி உனக்கு ஞாபகஞ் செய்தேன். உனக்கு மேலான கதி உன் நாயகன்றான். அவனிடமே உன்மனம் எப்பொழுதும் சார்ந்திருக்க வேண்டும்—என்றாள்.

இதைக் கேட்டதும் கௌசிகன் மனைவி அனுசூயை அம்மையாரை அன்போடு பார்த்து "என்னம்மா! எனக்

குச் சிறிதுண்டாயிருநத பதிபகதியைத தாஙகள்
விளககினீாகள. சநதோஷம. தேவரீா கூறியவறறை
யானும அறிவேன. மாதாகளுககுக கணவனை ஒதத
நலலகதி வேறெனறுமிலலை கணவனுடைய பரிபூரண
மான அனபைப பெறும மாது உயிரோடு கூடிவாழும
நாளிலும இறநதொழிநத நாளிலும சுகமே பெறு
வாள ஆதலால மாதாககுக கணவனே பெரிய தெய்
வம அறிநது கொணடேன கறபிறகாசாக விளங
கும தாம இநத ஏழையின குடிசையை நாடிவநததன
நோககம யாதோ?—எனறு கேடடாள

அனுசூயை யமமையாா "அமமணி, உன சாபத
தால சூரியன உதியாம விருககிறதலலவா? அதனால
உலகமெலலாம வருநதுகிறது தேவாகள எனனிடம
குறை கூறிக கொணடனா பகலே இலலாதொழி
வதால யாவாககும ஒருதொழிலும செயய முடி
யாமலிருககிறது சூரியன காணாதொழிவதால இனி
மழையுமிலலாமற போகும மழையிலலாமற போனால
உலகமபிழைககுமா? உனனுடைய சொலலால உலகமே
பாழபடுகினறது. உலகமனைததிறகும இபபோது நேரிட
டிருககும பேரிடரை ஒழிககவேணடு மெனகிற
கருணை உனககிருககுமானால முனபோல சூரியோதய
மாகுமபடி அநுககிரகஞ செய" எனறாா.

இதைக கேடடதும கௌசிகன மனைவி "மாணடவய
ரின சாபததை நீா கவனிததீரா? அவா சாபபபடி, சூரி
யோதயமானால என கணவன இறநதுவிடுவாா இதற
கெனனசெயவது?" எனறு கேடடாள.

அனுசூயை அமமையாா 'நீ கவலைப படாதே!
நான உன கணவனை இசசாபதலிருநது காபபாறறுகி
றேன நான கறபுடைய மாதரின பெருமபுகழை
யும மகிமையையும சிறபபடையுமபடி செய்ய எபபோதும
முயலவேன ஆதலால நான சொலவதறகு நீ சறறு
இணஙகவேணடுகிறேன" எனறு சொனனாா.

கௌசிகன மனைவி, "நலலது! தமது சிததம

என பாககியம" என்றா அனுசூயை யமமையாா, சந தோஷததுடன தன காததில ஜலததையளளி, சூரிய பகவானைச சிநதிதது வரவேண்டினள. உடனே சூரி யன உதயகிரியிலே தோனறினன அககணமே கௌசி கன உயிா போயிறறு அவன நிலததிலேவிழுநதான விழுமபோது அவனுடைய மனைவி ஆ! எனறலறி அவ னைத தாஙகிக கொணடாள

அனுசூயையமமையாா அவளை நோககி, "சௌபாககிய வதி! நீ வருநதாதே! எனனுடைய வலலமையைபபாா நான நெடுஙகாலமாக என கணவரைத தொழுது சிறு தவமுடையவளாயிருககிறேன எனமனமானது என் நாய கரோடு கலவி, அறிவு, ஒழுககம, வடிவு, இயற கை, சொல்லினிமை, ஆறறல, தவம், பெருமை, செலவம முதலியவறறு ளொனறிலும சமமான வேறொரு புரு ஷன இருககினறான் எனறு காணுமலிருபபது உணமை யானுல, இந்த வேதியன நோய் நீஙகி இளமைபபெறறு உயாத்தெழககடவன எழுநதபின நூறு வருஷம இம மனைவியோடு பிழைததிருககககடவன!" எனறுகூறினா.

கூறிய மாததிரததில கௌசிகன நோய நீஙகி இள மைப பருவநதாஙகி உயிாததெழுநதான. ஆசசாியம! ஆசசாியம! என்று தேவாகள வியநது பூமழை பொழிந தனா தேவ துநதுபி முழஙகியது. உடனே பிரம தேவா தேவாகளுடன பூலோகததிறகு வநது அனு சூயை அமமையாரை வாழததி வேண்டிய வரஙகளைத தநது சென்றனா கறபின மகததுவததைக கணடு உலகம புகழநதது

இதனாலேதான தமிழ்வேதம—

* "பெணணிற் பெருநதகக யாவுளகறபெனனுந
திணமை யுண்டாகப பெறின"

என்று கூறியது.

---

* ஒருவன அடையும பொருள்களில மனைவியின் மேம பட்ட பொருள்கள யாவையுள? அவள கறபெனனும கலஙகா நிலைமை உண்டாகப பெறின

## ஹாஸயம.

ஒருவா தமது மகளுடைய கலயாணததுக கென்று ஒரு பீபபாய் நிறைய எணணெய வாஙகி அதை மூடி போட்டு மூடிப பூட்டி முத்திரை யிட்டுப பத்திரப்படுத்தி யிருநதாா இவா தாககசாஸ்திரபணடிதா; பணககாரா. ஆனால் பிறாககு ஒனறைக கொடுகக மனமிலலாதவா, எவோரையும எயபவொட்டா இவா சில நாள பொறுத்துக கலயாண சமீபத்தில இநதப பீபபாயைத திறநது பாாததாா இதில எணணெய குறைநதிருநதது பணககாரன பககததிலேயும் பத்துப்போ பைததியககாரன பககததிலேயும் பததுபபோ, எனபது போல அவன பககததிலே இபபோது பததுபபேரிருநதனா அவன அவாகளைபபாாதது, "என இபபடி எணணெய குறைநதிருககிறது, என்ன ஆசசரியம" எனறு கூறிவிட்டு உபாநிமிாநத வணணததிலே ஆலோசிததாா இபபொழுது அஙகிருநதவாகளிலே ஒருவன, இநதப பீபபாயககு அடியிலே துளை பண்ணி யாரேனும எண்ணெயைக கொணடு போயிருககககூடுமெனறெணணுகிறேன என்றான தாககசாஸ்திரி, அவனைப பாாததுச சை, என்று கூறி முகஞசுளிதது," என்னடா உளறுகிறாய? பீப்பாய்க்கு அடியிலே எஙகேயடா எண்ணெய் குறைநதிருககிறது? மேலே யலலவா 'குறைநதிருககிறது' இதைக கவனியாமல பேசுகிறாயே ! மூடமே" என்று திருவாய்மலாநது, "எணணெய எபபடிக குறைநதது?" என்றபடி தம தலையைத தடவிக கொணடு தியான சமாதியில உடகாாநதாா.

# பூர்வீக அரசு

இராமாயணம நடநதேறிய காலததிலும அதற்கு முநதிய காலததிலும அரசாகளுககும குடிகளுக்கும இருநத ஒற்றுமை நேசம மெசசததககுநததே அதை நாம இப்போது கேட்டபோதிலும நமககது பரம சநதோஷததைதக கொடுககினறது அரசன குடிகளைத தன உயிரபோற கருதித தான உடலபோலிருநது வேணடியவறறை ஒழுஙகுபெற நடததிவநதான குடிகளும அரசனைத தஙகளுயிரபோ லெணணித தாஙகளுடலபோ லிருநது அரசனுககு உறசாகததையும ஊககததையும ஊட்டி வநதனா இதை விவரிகக இஙகொரு சிறு கதையைக கவனிபபோமாக

வேனன் எனனும பெயரைக கொணட வேநதனொருவன இருநதான அவன அஙகாராஜன எனபவனுடைய அருநதவப புதலவன அரசனானவன தனனாலும, தன சேனையாலும, பகைவராலும, திருடராலும, மிருகஙகளாலும குடிகளுககு ஒரு பயமுமிலலாமல ராஜரீகம செயயவேணடுமெனறு தருமசாஸ்திரம சொலலுகினறது. ஆனால வேனபூபதி மேறசொனன தாம சாஸதிரததுககு நோவிரோதமாக அரசு செயதுவநதான; பெரியோாகளுடைய நறபோதனையை அவமதிதது வநதான. அதனால குடிகள மிகவும வருததமடையலானாகள. இநத அககிரமததைக கணட மகாிஷிகள அநத மனனனை எநதவழியிலும திருதத முடியாதவராயச

சபித்துக் கொன்றார்கள். கொடுங்கோலரசரது பெருமை ஓங்குவதுபோல் தோன்றி உடனே அவர்களுக்குத் தங்க இடமும் குடிக்கக் கூழும் இல்லாமற்போவது உண்மை யல்லவா ?

மற்றும் நல்லவர் நேசத்தை விடுதல், அயல் மாதரை விரும்பல், உயிர்களிடம் ஈவு இரக்கம் சிறிதும் கொள்ளாமை ஆகிய இவைகளே அவர்களுக்குப் பூஷணம். பிரத்தியக்ஷமாகக் கெடுதி நேரிடுவதைக் கண்டாலும் அவர்கள் பெருநெருப்புக்கும் பெயராத மலைப்பாம்புபோலக் குணப்படுவதில்லை இத்தகையோர் கடவுளின் அல்லது பெரியோர்களின் சொல்லம்புக்கு இலக்காகத்தானே வேண்டும் உளியானது மிருதுவான தளிரின்மீது ஊன்றப் பெற்றாலும், தட்டாமல் இறங்குமா ? அதுபோல இவர்கள் தண்டனை பெறாது வழிக்கு வரமாட்டார்கள்

"பெரியாரைப் பேணாது ஒழுகிற் பெரியாரால்
பேரா இடும்பை தரும்"

என்றன்றோ தமிழ்மறை பேசுகின்றது.

இப்படி வேனராஜன் பெரியோர்களுடைய சாபத்துக்குப் பாத்திரனாய்ப் பரலோக மடைந்தபோது அவனுடைய தாயார் சுநீதா அவனுடலைத் தைலத்தில் விட்டு வைத்துப் பாதுகாத்து வந்தாள் புத்திரசோகம் எவரைவிட்டது ? அது பெண்மக்களைச் சுளுவில் விட்டொழியுமா ? சுநீதா தன் பிள்ளையின்மீது வைத்திருந்த பாசத்தால் வேனனுடைய உடலைப் பாதுகாக்க நேர்ந்தது.

---

பேணாது-நன்கு மதியாது அவமதித்து, பேரா-எக்காலத்தும் நீங்காத, இடும்பை-துன்பம்.

தாய்மார் பக்ஷம் பாராட்டுவதில் நல்ல பிள்ளையையும் துஷ்ட பிள்ளையையும் சமமாகவே பார்ப்பது சகஜம். வேனனுக்குப் பிறகு உலகம் தக்க அரசனின்றித் தவிக்க நேர்ந்தது. ஆகவே உலக விவகாரங்கள் ஒழுங்குபெற நடைபெறுவது தவறலாயிற்று. பழி பாவங்கள் வரம்பு கடந்து பரவத் தலைப்பட்டன. மகரிஷிகள் ஒன்றுகூடி யோசித்து நாட்டுக்கோர் ராசனை ஏற்படுத்த இஷ்டங் கொண்டார்கள்.

முனிவர்கள் சுநீதா என்பவள் பத்திரப்படுத்தி வைத்திருந்த வேனராஜனுடைய உயிர் நீங்கிய உடலைக் கொண்டுவரச் செய்து அவனுடலின் வலக்கையை மந்திர பலத்தால் கடைந்தார்கள். அதனிடமாக ஒரு புருஷன் தோன்றினான். அவன் பிருது என்னும் பேரைப் பெற்று உலகத்துக்குச் சக்கரவர்த்தியாய் அரசு புரியலானான். நற்குணமும் நன்னடக்கையும் இந்தப் பிருதுவென்பவனிடம் இயற்கையாகவே அமைந்திருந்தன. இவனைச் சற்குணசம்பன்னன் என்று யாவரும் புகழத் தொடங்கினார். நேச பாவனை, ஜீவகாருண்யம், பரோபகாரம் ஆகிய பிறவிக் குணங்கள் மூன்றும் இவனிடத்தில் பொருந்தியிருந்தன.

வேனன் செய்து வந்த கொடுமையால் பிரபஞ்சத்தில் அறப் புல் பூண்டும் தலையெடாமற் போகவே ஜனங்கள் யாவரும் பசிப்பிணியால் மெலிவடைந்து வருந்தி வந்தார்கள். பசிப்பிணியை பகவான் எல்லாப் பிராணிகளுக்கும் ஜீவாதாரமாக ஏற்படுத்தியிருக்கிறார். அவ்வேற்பாடுதான் ஒருவரை யொருவர் மதிக்கச் செய்கின்றது. மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை தானம், தவம், உயர்ச்சி, தாளாண்மை [முயற்சி] இல்லறப் பற்று ஆகிய பத்தும் பறந்தோடுவது இப்பசியினாற்றானே. குடிகள் இப்போது பிருது சக்கரவர்த்தியினிடஞ்

சென்று முறையிட்டார்கள் ; தங்கள் மீது கிருபை வைத்துத் தங்களுக்கு நேர்ந்துள்ள பசிப் பிணியைத் தீர்த்தருளுமாறு வேண்டிக்கொண்டார்கள்.

குடிகளின் முறைப்பாட்டுக்கு மனந்தளர்ந்த பிருது சக்கரவர்த்தி பூமிதேவியைச் சகல வளங்களுந் தழைத்தோங்கக் கிருபை செய்யும்படி வந்தன பூர்வமாகப் பிரார்த்தித்தான். பிரார்த்தனை பயன்படவில்லை. அதனால் கோபங்கொண்டு சக்கரவர்த்தி வில்லைக் கையிலேந்திப் புறப்பட்டனன். அதுகண்ட நிலமங்கை அச்சமுற்றுப் பசுவின் உருவம் பூண்டு ஓடலுற்றாள். சக்கரவர்த்தி அப்பசுவை விடாது பின்தொடர்ந்தனன்.

பூதேவியான பசு ஒருவரிடமும் அடைக்கலம் பெற முடியாது கடைசியில் பிருது சக்கரவர்த்தியையே சரண் புகநேர்ந்தது. அப்போது தேவர் முதலியவர்களிற் சிறந்தவர்கள் கன்றின் உருவங்கொண்டு வர, அந்தப் பசுவும் பால் சுரக்க, வேண்டிய பொருள்களைப் பெற்று மகிழ்வடைந்தார்கள். அவ்வாறே பூலோகத்திலுள்ள ஜீவர்களும் பயிர் பச்சை முதலியவெல்லாம் பெற்றுச் சுகமடைந்தனர்.

பிருது சக்ரவர்த்தி பிரஜைகளிடம் கொண்ட காருண்யத்தை எல்லோரும் மெச்சிக் கொண்டாடினார்கள். குடிகளும் சக்கரவர்த்தியிடம் பேரன்பு கொண்டு அவன் மனங்கோணாதபடி நடந்து வந்து அவனை மகிழ்வித்தார்கள். இத்தகைய அரசே சிறந்ததென்று நாம் அறிகிறோம்—இது தான் அரசனுக்கும் குடிகளுக்கும் பரஸ்பர ஒற்றுமையை விருத்தி செய்யத்தக்கது.

இச் சக்கரவர்த்தியைக் கம்பரும், "பேதித்த வுயிரனைத்தும் பெரும் பசியால் வருந்தாமல், சோதித்தன் வரிசிலையால் நிலமடந்தை அமுதுதவச், சாதித்த பெருந்தகை" என்று உயர்த்திப் பேசியிருக்கின்றார்.

ம. இராஜகோபால பிள்ளை,
வித்வான், கோமளேச்வரன் பேட்டை, சென்னை.

## சிறுத் தொண்டர்

(201ம் பக்கத் தொடர்ச்சி)

தங்கள் அருமைக் குழந்தை மரணத்திற்கு ஒரு சிறிதும் மனஞ்சாமல் பேசவே, தாய் தந்தையர்கள் "அந்தோ! என்ன அறிவு! என்ன அறிவு!" என்றெண்ணி உருகி அவனைப் பார்த்துக் கண்ணீர் பெருக்கினர்.

சீராளன், அவர்களைப் பார்த்து "ஏன் இப்படிக் கலங்குகிறீர்கள், விஷயத்தைச் சொல்லுங்கள் நடக்கவேண்டியதென்ன? சொல்லுங்கள் நான் உங்கள் விருப்பப்படி நடக்கக் காத்திருக்கிறேன்" என்றான்.

சிறுத்தொண்டர், சீராளனை அருகிலழைத்து, "உன்னுடைய புத்திசாலித்தனத்துக்கு மகிழ்ந்தேன். இன்று நமது வீட்டிற்கு ஒரு சிவனடியார் அமுதுண்ண வந்திருக்கிறார். அவர் ஆறுமாதத்திற் கொருமுறைதான் உண்பதாம். சிவனடியாருக்கு அமுது படைப்பதனாலுண்டாகும் புண்ணியம் பெரிது. சிவனடியார் நமது இல்லந்தேடி வந்திருப்பது பெரும்பாக்கியமாகும். அப்பா! சீராளா! ஒன்று சொல்ல வேண்டியதாயிருக்கிறது இச்சமயம். நீ மனம் வைத்தால்தான் இன்று இந்த அடியார் பூசை நிறைவேறும்" என்றார்.

சீராளன்—பிதா! என்னாலாகவேண்டியதைச் சொல்லுங்கள் தாமதியாமல். ஏன் மயங்கவேண்டும்? என்னிடத்திலென்ன சந்தேகமுங்களுக்கு? சீராளன் தாய்தந்தை

யாககு அடஙகாதவனு? அவாகளபேசசைக் கேளாதவனு? அவாகளுடைய மனஙகோண நடபபவனு?—எனறுன.

சிறுததொண்டா—சீராளா, உனனிடததில இச சமயம நான பரமசநதோஷ மடைகினறேன உனககு ஸகல லோகசரணயனுகிய சிவபெருமானுடைய திருவடி நிழலில வாழும பெரும பேறு கிடைககும. அபபா! இனறு அமுதுககாக வநதிருககும சிவனடியாா பிளளைக கறி அருநத விருமபுகிறா! அதறகெனன செயவதெனறு நானும உனதாயாரும நெடுநேரம ஆலோசிததோம. ஒரு யோசனையும சரிவராமையினுல உனனை அவாககு ஸமாப பிககத தீரமானிததோம. ஆனுல உனனைபபாாதது உன பேசசைக கேடகுமபோது எஙகள மனம கலஙகுகிறது-- எனறு வேறுபேச நாவெழாமல திகைததாா.

சீராளன தநதையின திருமுகததை நோககி "கவலை வேணடாம! அபபடியேசெயயலாம இநத உடல அந தச சிவனடியாரின பசிபபிணி தீாககும உணவாவதில நமககெலலாம பெருஞசுகிாத முணடெனபதை யறிநத வராகிய நீஙகள கவலைப படுவானேன? இநத உடல என றைககிருநதாலும அழியவேணடியது தானே? அழிநத உடல நாய், நரி, காககை, கழுகுகளுககு உணவாவதை நாம காணகிறேம. அபபடிக கிலலாமல மகா சிவபகத ருககு ஆகாரமாவதெனறுல நமது பாககியம பெரிதல லவா? தாமதிககவேணடாம. சிவனடியாா படடினி யிருப்பாா. ஆதலின விரைவில தைரியமாயக காரி யததை நடததுஙகள" எனறுன.

இதன பிறகு சிறுததொண்டரும அவா மனைவியும மனநதுணிநதனா. அவாகள் உலகவாழ்வின நிலைமையை அறியாதவாகளா? அறிநதவாகளாயினும மாயை சற்று அவர்களை மயககியது. இபபொழுது அநத மயககந தெளிநதுவிட்டபடியால சிறுததொண்டர் மைநதனைக் கையைப பிடிததழைத்து மனைவியின வசம ஒப்புவிதது, "விரைவில காரியததை முடி" எனறு ஆக்ஞையிட்டாா.

திருவெண்காடடுநஙகை வேறு பதிற்பேசாமலும்

மனங் கலங்காமலும் சீராளனை அழைத்துக்கொண்டு சமையலறை சென்றாள். அந்தப் புண்ணியவதிக்கு இப்பொழுது, சிவனடியார் பட்டினி யிருக்கிறாரே, எங்கே ஒரு சமயம் நேரமாயிற்றென்று கோபித்துக்கொண்டு போய்விடுவாரோ என்கிற கவலை மேலிட்டது மைந்தன் பாசம் மறைந்தது

ஆகவே, சிவபெருமானைத் தியானித்துத் துதித்தாள் அதுகண்டு சீராளனும் துதித்தான் இருவரும் சிவமயமானார்கள் பிறகு நடக்கவேண்டியது நடந்தது

நங்கை, சிரசு கறியமுதுக் காகாதென்று மறைத்துவிட்டு உடலைச் சமைத்தனள், இதனுடன் வெகு பக்குவமாக வேறு கறிகளும் அன்னமும் சமைத்துக் கணவனுக்குச் சொன்னாள்

அவர் மிக மகிழ்ச்சியுடன் பைரவமூர்த்தியை அழைத்துவந்து அவர் திருவடிகளை விளக்கி அந்த நீரைத் தாமும் தமது மனைவியுமாக உட்கொண்டு, தூ ஆசனத்தில் அவரை உட்காரவைத்து ஆராதித்துத் தொழுதார். நங்கையுந் தொழுது உடனே இலை கொண்டுவந்து போட்டுப் பரிமாறுவது எப்படியென மயங்கி நின்றாள்.

பைரவர், “அமுதுகளையெல்லாம் ஒருங்கே கொண்டுவந்து படைக்கவேண்டும்” என்றார்.

நங்கை உடனே பரிகலந்திருத்தி அவ்வாறே அமுது படைத்தாள் பைரவர் “நாம் சொல்லியவண்ணமே இறுப்புகளெல்லாம் சமைத்தீரோ?” என்று கேட்டார்.

நங்கை:—ஸ்வாமி, தலைக்கறி திருவமுதுக் காகாதென்றெண்ணி விலக்கினேம்—என்றாள்.

பைரவர்:—அதுவும் நாமுண்பதே—என்றனர்.

அப்பொழுது நாயனாரும் நங்கையும் மனம் வருந்தினர். அருகிலிருந்த தாதி “அதனையும் சமைத்துள்ளேன்; வேண்டுமானால் கொண்டுவருகிறேன்” என்றாள். உதைக் கேட்டதும் நாயனாரும் நங்கையும் மகிழ்வுற்று, “அதனைக் கொண்டுவா” என்றார்.

உடனே நங்கை போய் அதை யெடுத்துவந்து படைத்தாள். படைத்தவுடன் பைரவர், சிறுத்தொண்டரை நோக்கி, "என் உடனிருந்துண்ணச் சிவனடியார் எவரையேனும் அழையும்" என்றனர்.

நாயனார், "ஆகா! இதற்கென்ன செய்வேன்" என்று நினைத்து உடனே பைரவரை வணங்கி, "ஸ்வாமி, இதோ அழைத்து வருகிறேன், சற்றுப் பொறுக்க வேண்டும்" என்று வெளியே சென்று சிவனடியாருக்காக நெடுகலும் போய்த் தேடிப் பார்த்தார். ஒருவரையுங் காணாமையினால், விசனத்துடன் திரும்பிவந்து பைரவரிடம் "ஸ்வாமி, நெடுகலும் தேடினேன்; இந்த வேளைக்கு அடியாரொருவரையுங் காணவில்லை என்ன செய்வேன், ஆக்ஞைப்படி நடக்கிறேன்" என்று கரங்குவித்து நின்றார்.

பைரவர், "ஓ அப்படியா, அப்படியாயின், உம்மைப் போல விபூதி யணிந்தவர் ஒருவருமில்லாததினால் நீரே எம்முடனிருந்து அமுதுண்ணும்" என்றார். ஆகா! சிறுத்தொண்டர் என்ன செய்வாரையா! தாம் பெற்ற பிள்ளையைத் தாமே உண்பதென்றால் அவர் மனம் எப்படியிருக்கும்? ஈசன் திருவிளையாடலை யென்னென்பது!

பைரவர் அவ்வாறு கூறியதும் நாயனார் சீவனற்றவர்போல சிறிதுநேரம் நின்று "ஸ்வாமி அப்படியே" என்று உடன்பட்டார். பைரவர் அவரைத் தம்மருகில் உட்காரப்பண்ணி, உட்கார்ந்ததும் நங்கையை நோக்கி வேறொரு பரிகலந்திருத்தி நமக்குப் படைத்திருப்பதி லெடுத்துப் படையுமென அவ்வாறே அந்நங்கை செய்தனள்.

படைக்கவே, நாயனார் நாமுண்ணாதிருந்தால் பைரவர் உண்ணாரென்று கருதித் தாம் முதலில் உண்ணத் தொடங்கினார். தொடங்கியது தான் தாமதம், பைரவர் சினங்கொண்டு, "நான் ஆறுமாதத்திற் கொருமுறை உண்பவன் அப்படிப்பட்ட நான் உண்பதன்முன் நீர் எப்படி உண்ண ஆரம்பித்தீர்! சே இது மரியாதையோ!

நல்லது செய்தீர்'' என்றுரைத்து "நீர் புத்திரனைப்பெற்றிருந்தால் உடனுண்ண அவனை அழையும்" என்றனர்.

நாயனார்—ஸ்வாமி, அவன் இப்போது உதவான்—என்றார்.

பைரவர், "நாம் அவனுடனிருந்து தான் உண்பேன்" என்று பிடிவாதம் பிடித்தார்.

சிறுத்தொண்டர் கலங்கினார். பைரவர், "நீர் போய் உன் மகனை அழைத்துவாரும்" என்றார். சிறுத்தொண்டர் தமது மனைவியை நோக்கினார். மனைவி வெளியே சென்று சீராளா! சீராளா! வா என்று அழைத்தாள்! அழைக்கவே, சீராளன் பள்ளிக்கூடத்திலிருந்து ஓடிவருபவனைப் போல ஓடிவந்து தாயாரைக் கட்டிக்கொண்டான்.

ஆகா! அந்த அற்புதவேளையினற நங்கைக்கு இரசமயம் உண்டாயிருக்கும் சந்தோஷத்தை அளவிட முடியுமோ?—

பெருமகிழ்ச்சியில் மூழ்கிய நங்கை சீராளனைக் கட்டியணைத்து முத்தமிட்டு இழுத்துக்கொண்டு போய் நாயகரிடம் விட்டாள். என்ன சொல்லுவதிந்த அதிசயத்தை! நாயனார் மகனைக்கண்டதும் பரமானந்த பரிதராகி கண்ணைமூடிக்கொண்டு சிவபெருமானை தியானித்தார், பிறகு கண்ணைத்திறந்து பார்க்கையில் அருகேயிருந்த பைரவரைக் காணோம். இருவரும்—இத்தனைநேரம் எங்கே இங்கிருந்த அடியார்? என்று வியப்புற்று, எங்கும் நிறைந்தவரான நீலகண்டனைத் தியானித்துத் துதித்தனர்.

அந்நிமிஷத்தில் சிவபெருமான் விருஷபவாகனத்தில் வாமபாகத்தில் பார்வதி தேவியாருடன் காட்சி தந்தார். அந்த அரிய தரிசனம் கண்ட நாயனார், அவர் மனைவி, சீராளன் மூவரும் ஆநந்த பரவசர்களாய்த், தரையிலே விழுந்து பணிந்து எழுந்து நின்று துதித்தார்கள்; இந்தப் பாக்கியம் யாருக்குக் கிடைக்குமென்றெண்ணி மகிழ்ந்தார்கள். சிவபெருமான் அவர்கள் மூவரையும் தம்முடன் கைலாசத்திற்கு அழைத்துக்கொண்டு சென்றார்.

# வித்வத சாமர்தநிய வசனம்.

ஒரு சமயம ஓா அரசனிடததில விதவானகள ஸம மானம பெறச சென றிருநதனா. அபபோது பரீக்ஷை நடநதது ஸமஸ்தான விதவானுகிய சொககலிஙகததே சிகா எலலோரையும கேளவிகள கேடடுப பரீக்ஷிததாா. விதவானகளெலலாம அவா கேடட கேளவிககுத தகக விடை கொடுததுவநதாாகள் அவாகளில தாமலிஙகம எனபவா மாததிரம சொககலிஙகம கேடட ஒரு சிறு கேளவிககு விடைசொலலத தெரியாமல விழிததாா அபபொழுது அரசன தலையை அசைததுப புனமுறு வல செயதான அவனருகே யிருநத அமைசசாகளி லொருவா "என்ன ஓய தாமலிஙகம, சொககலிஙகததி னிடம தலையைக கொடுதது விடடீரே?" எனறு கேட டாா தருமலிஙகம சிறநத விதவான எததனையோ முறை இநத இராஜ சபையில ஸமமானம பெறறிருக கிறாா. இனறு சொககலிஙகம கேடட கேளவியால ஏதோ மறதி யேறபடடுவிடடது. ஆனைககும அடி சறுககுமனறோ?—

அமைசசா இபபடிக கேட்கவே, தருமலிஙகம 'ஆம நான தலையைக கொடுததுவிடடேன. நீா அவ ரிடம சீககிரம கததியைக கொடும" எனறாா. இவவாறு அவா கூறியது, நான தலையைக கொடுததுவிடடேன, கததியைக கொடுததால அவா வெட்டுவாா. குறறவா ளியைத தணடிபபது சகஜந தானே எனறு ஒரு பொருளும, நான தலையைக கொடுதது விடடேன, கததிகொடுததால அவா சரைபபாா எனறு ஒரு பொரு ளும பெறபபடுகினறமையினுல இநதப புததிசாலித தனததுககு அவரைப புகழ்நது அரசன அவாககு வழக கமபோல ஸமமானஞ செயதனுபபினன. கலவிமான கள எநத விததததிலும தபபிததுக கொளவாாகள.

# நறகுண முள்ளபையன.

முற்பகல் செயயிற் பிற்பகல் விளையும

சறகுணன எனனும ஒரு பையன ஒருநாள் தன ஊருககு ஐநது மைல தூரததி லுளள ஒரு கிராமததிறகுப போக வேணடியிருநதது. ஆகவே அவன தனனுடன ஒரு நாளைககு வேணடிய ஆகாரததை எடுததுககொணடு கால நடையாயப புறபபடடுபபோனுன கொ ஞசதூரம போனதும ஒருசிறிய நாய்ககுட்டி அவனிடம வாலைக குழைததுககொணடு வநதது சரியான ஆகாரம கிடைககாமல படடினியோடிருநது அவஸதைபபடும பரி தாப நிலைமையிலிருககிறமாதிரி அது தெனபடடது இருநதாலும முதலில அதை அவன கவனியாமல போயக கொணடிருநதான. அநத நாயககுடடியும தளளாடித தள்ளாடிககொண்டே அவனைப பினதொடாநதது. இதை மறுபடியும கவனிதத சறகுணன "ஓ கோ! இதன நிலைமை மிகவும பரிதாபமாயிருககிறது! ஆயினும என னிடம இருககும ஆகாரததில கொஞசம இதறகுக கொடுததால நான சாயஙகாலம படடினியோடுதான வீடு போக வேணடிவரும. இருநதாலும இநத நாய்ககுடடி எனனைவிட அதிகபபசியினுல கஷடபபடுகிற படியால நான என ஆகாரததில கொஞசம இதறகுக கொடுக கிறேன" எனறு சொலலிககொணடே தன ஆகாரததில

கொஞ்சம் எடுத்து அதற்குப்போட்டான். நாய்க்குட்டி
யும் அநேகநாட்களாய் ஆகாரமே சாப்பிடாததைப்போல
மிக்க ஆவலுடன் இட்டதைப் புசித்தது.

அவ்விடம் விட்டு அந்தச் சிறுபையன் கொஞ்ச
தூரம் போனான். நாயும் அவன் கூடவே வாலையாட்டிக்
கொண்டும், முன்னங்கால்களை நீட்டி நீட்டித் தாண்டிக்
கொண்டும் ஓடி வந்தது. அங்கோரிடத்தில் ஒரு கிழக்
குதிரை கொடிய வியாதியால் அவஸ்தைப்படுகிறமாதிரி
படுத்துக்கொண்டிருந்தது. அவன் குதிரையைப் போய்ப்
பார்த்தான். அது ஆகாரமே இல்லாமல் பசியினால்
களைத்து எழுந்திருக்கக்கூட முடியாமலிருந்தது. இப்
பரிதாப நிலைமையைப் பார்த்த பையன் "இக்குதிரையோ
அதிக அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கிறது. இப்
போது இதற்கு நான் உதவி செய்துகொண்டிருந்தால்
நான் வீடு திரும்ப அதிகநேரமாய் இருட்டிப்போய்
விடும், வழியிலோ திருடர்பயம் அதிகமென்று கேள்விப்
பட்டிருக்கிறேன். இருந்தாலும் இதைப் பரிதாப நிலை
யில் விட்டுப்போகமனம் வரவில்லை. ஆகையால் என்னால்
கூடியவரையில் கஷ்டப்படப்போகிறேன். நான் இந்தக்
குதிரைக்கு உதவி செய்வது பேருபகாரமாகையால் நான்
செய்தே தீரவேண்டும். எனக்குக் கடவுள் உதவி புரி
வார்" என்று சொல்லிக்கொண்டு கொஞ்சம் தூரம்போய்
புல் இருக்குமிடம் தேடி, கொஞ்சம் புல் பிடுங்கிக்கொ
ண்டு வந்து அதற்குப்போட்டான். குதிரை பசிப்பிணி
யால் வருந்திக்கொண்டிருந்தமையால் அப்புல்லை வெகு
ஆவலுடன் தின்றது. உடனே கொஞ்சம் ஜலமும்
கொண்டுவந்து வைத்தான், அதையும் குடித்தது.

குடித்த உடன் அதற்குக் களைதெளிந்து அநேக முறை உடல் அசைத்துக் கொடுத்துக் கடைசியில் எழுந்து நடந்து புல்மேய ஆரம்பித்தது.

சற்குணன் அதைக் கண்டு சந்தோஷப்பட்டுக்கொண்டே கொஞ்சதூரம் போனவுடன் ஒரு மனிதன் அங்கொரு சேற்றுக்குட்டையிலிருந்து கரையேறத் தெரியாமல் தவித்துக்கொண்டிருந்தான். அவனைப் பார்த்த பையன் "ஐயா, என் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கிறீர்? இந்தக் குட்டையை விட்டு வெளிப்பட வர உமக்கு வழி தெரியவில்லையா?" என்று கேட்டான். அந்த மனிதன் "என் எஜமானே! நான் இந்தக் குட்டையில் விழுந்துவிட்டேன் எனக்கோ கண் தெரியாது குருடன் இவ்விடம் அங்கும் இங்கும் போனால் ஆழமாயிருக்கும் அதில் மூழ்கிப்போவேனோ என்கிற பயத்தினால் இவ்விடத்தில் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறேன் என்னை யாராவது காப்பாற்ற வேண்டும்" என்று சொன்னான்.

பையன்:—என் வேஷ்டி நனைந்து போனாலும் போகிறது உன் தடியை என்னிடமாக வீசி எறி நான் உன்னைக் கரை ஏற்றிவிடுவேன்" என்றான்.

உடனே குருடன் பையன் தெரிந்த பக்கமாகத் தன் குச்சியை வீசி எறிந்தான். பையன் அந்தக் குச்சியை, எடுத்து ஊன்றிக் கொண்டு ஆழம் பார்த்துக்கொண்டே அதிக ஜாக்கிரதையாய்க் குட்டையில் இறங்கிப்போனான், கடைசியில் குருடனிடம் போய் அவன் கையைப் பிடித்து மெதுவாக அழைத்துக் கொண்டு கரையில் கொண்டுவந்து விட்டான். குருடன் ஐயா, எனக்கு இனி

வழி தெரியும நான வீடுபோய்ச சேருகிறேன. தங்களு
கரு மிகவும சிரமம கொடுததேன. மனனிததருள வே
ண்டும. தஙகளுககு ஸாவ மஙகளமும உண்டாகக்கட
வது எனறு வாயார வாழ்ததினன. சிறுபையனே இரு
ட்டாய்விடப போகிறதே எனகிற பயததினுல அதிக
விரைவாகத தன வழியே நடநதான

கொஞ்சதூரஞ் செனறவுடன யுததததில இரண்டு
காலுமிழநத ஒரு சிபபாய பசியால வருநதிக கொண்டி
ருபபதைப பாாததான. சிபபாய "அபபா எஜமானே!
நான அநேக யுதததததில சணடை செய்திருககிறேன.
கடைசியில நீ இபபோது பாாககிற நிலமையில எனது
இரணடு காலகளையும இழகக நோநதது இபபோது
ஆகாரம பணம ஒனறு மிலலாமல பசியால வருநதிககொ
ணடிருககிறேன உனனுலான உதவி செயதால பேருப
காரமாயிருககுமபபா" எனறுன

அவனுடைய பரிதாப நிலமையைக கணடு சகிககொ
ணுத பையன உடனே தனனிடம மிசசமாயிருநத உண
வை அவனுககுக கொடுதது "ஐயா, இதுதான இபபோ
து எனனிடமுளளது அதிகமிருநதால அதிகம கொடுப
பேன உமககுக கடவுள உதவி புரிவார" எனறு சொலலி
விட்டுத தன வழியே ஓடினன.

கடைசியில தான போகவேண்டிய ஊா போயச
சோநது அஙகு ஆகவேணடிய காரியததைை முடிததுக
கொணடு வீடுதிருமபித தனனுல கூடியவரையில வேக
மாய் வநது கொணடிருநதான அபபடி வேகமாக வந
தும பாதி வழி வருவதறகுள இருட்டிப போயவிட்டது.
நிலா வெளிசசமுமிலலை. நக்ஷததிரஙகளின வெளிசசம

கூடத தெரியாமல் அதிக இருட்டாயிருநதது. அவன நிதானததினமேல வநதுகொண்டே யிருநதான: வழி தபபி ஒரு காட்டுககுள போயவிட்டான.

திககும தெரியவிலலை திசையும தெரியவிலலை. அலைநது அலைநது பசி மேலிட்டுக களைததுபபோய மேலே போகமுடியாமல ஓரிடததில உட்காாநது பலமாக அழததொடஙகினன இபபடிக கொஞசநேரம அழுது கொணடிருககும்போது இவன காலையில உபகாரம செயத நாய வாயில ஒரு மூட்டையைக கௌவிககொணடு இவனி டம வாலை யாட்டியபடி வநது நினறது அதைபபாாதத பையன அநதமூட்டையை வாஙகி அவிழததுப பாாத தான. அதில நலல ரொட்டிகள இருககக கணடு சநதோ ஷபபட்டு அவைகளைப பசியாரததினறு களைதெளிநதான. தெளிநதவுடன தைரியஙகொணடு "நான உனககு அறப ஆகாரம கொடுததேன, நீ எனககு விசேஷமான ஆகாரம கொடுதது உதவினய" எனறு நாயைபபாாததுச சொலலி விட்டு "ஒரு நாயககுச செயத உபகாரஙகூட வீண போகிறதிலலை" எனறு மனததில சநதோஷ மடைந தான.

பிறகு எபபடியாவது வழியைககணடு பிடிததுப போகலாமெனறு இஙகுமஙகும போயப பாாததான வழியோ தெனபடவிலலை காலெலலாம முட்கள தைத தன. எனன செய்வான பாவம! ஒனறும தோனருத வனய்த தெயவமேதுணை யெனறு பிராாததது நினருன. ஈசன நலலையணைச சமயததில கைவிடலாகா தெனறு இரஙகி வெளிசசததை அனுபபினன, எனறு கருத நிலாவெளிசசம வீசத தொடஙகியது. அதுகணடு

திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை என்பது வீண்போகாமல் ஈசன் உதவிபுரிந்தான் என்று நினைத்து வழிதேட நாற்புறமும் பார்த்தான் பார்த்தவளவில் அங்கு அவனெதிரில் ஒரு குதிரை மேய்ந்துகொண்டிருந்தது அதனிடம் சென்று பார்க்கையில் அது அவன் உதவிசெய்த குதிரையாகவே இருந்தது அது கண்டு மகிழ்ந்து "இதுவோ நான் காலையில் உபகாரம் செய்த குதிரை இது இந்தக்காட்டிலேயே மேய்ந்து கொண்டிருக்கிறபடியால் இந்தக்காட்டில் இருக்கும் வழி நன்றாய்த் தெரியும். இது இப்போது என்னைத் தன்முதுகின்மேல் ஏற்றி வைத்துக்கொண்டு இந்தக்காட்டிற்கு வெளியே கொண்டுபோய் விடாதா! பார்ப்போம், உபகாரம் செய்தது வீண்போகாது, முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையுமென்பார்களே, இதுவும் ஆண்டவன் என்விஷயத்தில் சிறிது கோபந்திறந்தானோ நிதர்சனமாகக் காண்பித்தருளினரோ இப்போதும் உதவி அவசியம் கிடைக்கும் ஈசா கருணைபுரிய வேண்டும் என்று சொல்லிக்கொண்டே குதிரையைக் கூப்பிட்டுத் தன்கையால் தட்டிக்கொடுத்தான். குதிரையும் இவனைத் தெரிந்து கொண்டு இவனுக்கு நன்றிபாராட்டத் தயாராயிருப்பதாகத் தெரிவிப்பதுபோல் முகத்தை இவன் பக்கம் திருப்பியது. உடனே பையன் அதன்மேல் ஏறிக்கொண்டான். குதிரையும் ஒரு தொந்தரவும் செய்யாமல் புறப்பட்டு மெதுவாகக் காட்டைத் தாண்டி நல்ல ரஸ்தாவுக்கு வந்து சேர்ந்தது சிறு பையன் அதிக ஸந்தோஷப்பட்டுக் கீழே இறங்கிக் குதிரையைத் தட்டிக்கொடுத்து "நான் காலையில் இந்த அற்பப்பிராணிக்கு உதவி செய்யாதிருந்

தால் நான் நடுக்காட்டிலேயே திண்டாடிக்கொண்டுதா னிருக்கவேண்டி யிருக்கும். எந்த உதவியும் வீண் போகிறதில்லை" என்று சொல்லிக்கொண்டே தன் வழி நடந்தான்.

இவனை இன்னும் தொந்தரவு விட்டபாடில்லை. இவன் கொஞ்சதூரம் சென்றவுடன் இரண்டு திருடர்கள் வந்து இவனை மறித்துக்கொண்டு இவன் இடுப்புத் துணியைப் பிடுங்க எத்தனித்தார்கள். இச்சமயத்தில் இவனுடன் வந்துகொண்டிருந்த நாய் அவர்களில் ஒருவன் காலைப் பிடித்துக் கொடூரமாகக் கடித்தது. கடித்தவுடன் அவன் பையனை விட்டுவிட்டு நாயைத் துரத்திக்கொண்டு ஓடினான். நாய் குரைத்துக்கொண்டும், ஊளையிட்டுக் கொண்டும் ஓடியது. இந்தச் சந்தர்ப்பத்தில் "யாரடா திருட்டுப்பயல்கள் அங்கே, பிடியடா பிடியடா" என்ற சத்தம் கேட்டது. கேட்டதும் மற்றொரு திருடனும் பயந்து பையனைவிட்டு ஓடிவிட்டான்.

பையன் சத்தம்வந்த திக்கைத் திரும்பிப் பார்த்தான். தான் காலையில் உபகாரம் செய்த சிப்பாய் குட்டையிலிருந்து கரையேறிய குருடன் மதாளில் ஏறிக் கொண்டு வரக்கண்டான்.

சிப்பாய் பையனைப் பார்த்து "ஆஹா குழந்தாய்! உனக்குக் கடவுள் கிருபை உண்டாகுக! நீ எங்களுக்குக் காலையில் செய்த உபகாரத்திற்குப் பிரத்யுபகாரம் செய்ய இந்தச் சமயத்தில் வந்து உதவினதுமே இதுவே எங்களுக்கு வெகு திருப்தியைத் தருகிறது. நான் ஒரு வேலியோரமாய்ப் படுத்துக்கொண்டிருந்தேன். அப்போது இருவர் ஒரு சிறு பையனை வழிமறிப்பதைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பேச்சி லிருந்து அது நீயாகத்தா னிருக்கவேண்டுமென்று தீர

மானித்தேன். உனக்கு உதவிசெய்ய வேண்டுமென்று நினைத்தேன். நான் இரண்டுகாலுமில்லாத முடவனை படியால் எப்படிச் செய்வதென்று வருந்தினேன். இந்தச் சமயத்தில் இவர் இவ்வழியே வந்தார். நான் இவர் தோளின்மேலேறிக்கொண்டு வழிகாட்ட இவர் நடந்து வர நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தோம். செய்த உதவி ஒருபோதும் வீணபோகாதப்பா" என்றான். பையனும் அவர்கள் தக்க சமயத்தில் செய்த உபகாரத்திற்கு அவர்களுக்கு மனப்பூர்வமான வந்தனமளித்தான்.

பிறகு அவர்கள் எல்லாரும் சேர்ந்து பையன் வீடு போய்ச் சேர்ந்தார்கள். சேர்ந்ததும் நடந்த சங்கதிகளைப் பையன் தன் தகப்பனாருக்கு விவரமாகச் சொன்னான். தகப்பனார் சந்தோஷப்பட்டு அவர்களுக்கு நல்ல சாப்பாடு போட்டுப் படுத்துக்கொள்ளப் படுக்கையும் கொடுத்து உபசரித்தார். பையன் தன் ஆயுள்கால முழுமையும் தான் செய்த உபகாரத்தையும் பிறகு தனக்கு நேர்ந்த ஆபத்துக்களையும் அப்போது தனக்கு உதவி ஏற்பட்டதையும் நினைத்து நினைத்து,

"நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்"

என்ற ஆன்றோர் வாக்கியம் பொய்க்காமல் நான் பிரத்யக்ஷத்திலேயே கண்டனுபவித்தேன். என்றும் எந்த நிமிஷத்திலும் எந்த விடத்திலும் எந்தவிதமான உபகாரஞ் செய்ய நேரிடினும் செய்யத் தவறேன். இதுவே தெய்வ சம்மதமானது" என்று மகிழ்ந்துகொண்டிருந்தான். தன் ஆயுள்பரியந்தம் தனக்கு நன்றிசெய்த நாயையும் காப்பாற்றி வந்தான்.

குழந்தைகளே! இக்கதையினால் நாம் உபகாரம் செய்தால் அது ஒருபோதும் வீண்போகாது என்பது அறிந்துகொண்டோம். ஆகையால் நீங்கள் சமயம் நேர்ந்தவிடத்து உங்களாலான உபகாரம் செய்யத் தவறாதீர்கள். கடவுள் உங்களுக்கு உதவிபுரிவார்.

# ஹாஸ்யம்

ஒரு ஸ்திரீ தன கணவனை எபபோதும திட்டிக கொணடேயிருபபாள. அவன என்ன நலல வாாததை சொனனாலும, கேடபதே யிலலை அவன பரமசாது வாகையினால 'நமது தலைவிதி யிபபடி வநது சோந திருககிறது' எனறு சுமமா விருநது விடடான இப படி இருககையில ஒருநாள அவன வெளியே போயி ருநதான அபபொழுது கசசேரி சேவகனொருவன வரிபபணம கேடகவநதான. அவளவீடடுத தெருக கதவு சாததியிருநதது சேவகன கதவைத தடடுட லாயத தட்டினான அவளவீடடுககாரி தன புருஷனதான வநது கதவைத தடடுகிறான எனறெணணிககொணடு, "நீ கழிசசலிலே போயவிட! உனனைக கொணடுபோய வைகக! இநநேரமெனன? உனனை வெளியிலே எஙகே வாரிக கொணடு போசசு?" எனறு திட்டிக கொண்டே வநதாள சேவகன கதவைத தடடுவதை நிறுதத விலலை. அவளுககுக கோபம வநதுவிட்டது ஆகை யினால அவள "கதவைத திறபபதறகுள உனககெனன கேடு, நீ நாசமாய்ப்போக!" எனறு சொலலிககொண டே கதவைப படீரெனறு திறநதாள. திறநததும சேவ கனைககண்டு திடுககிட்டாள. சேவகன, நான வரிபப ணம கேட்க வநதால எனனை வாயில வநதபடி திட்டு

கிருயா பார் உன்னை " என்று சொல்லிக்கொண்டேபோய் விட்டான்.

சேவகன் நேரேபோய் அதிகாரியிடம் தன்னை இந்த ஸ்திரீவாயில் வந்தபடி திட்டியதாகப் பிரியாது கொடுத்தான் அதிகாரி வழக்கை யெடுத்துக் கொண்டார். விசாரணையில் அந்த ஸ்திரீ "எல்லோருடைய முன்னிலையிலும், 'நான் உண்மையைச் சொல்லுகிறேன்; வந்தவன் சேவகனென்று எனக்குத் தெரியாது என் கணவன் என்று நினைத்து நான் திட்டிவிட்டேன்?" என்று சொன்னாள் இதைக் கேட்டதும் அதிகாரியும் அங்கிருந்தவர்களும் நகைத்தார்கள் கணவன் "என் கண்ணே உன்னை மெச்சினேன்! இந்தச் சமயத்தில் உன் சுபாவமான செய்கையை மறைக்காமல் பேசினையே? அதுபற்றி நான் சந்தோஷப்படுகிறேன். நீ இத்தனை நாளாக என்னைத் திட்டியவைகளையெல்லாம் மறந்தேன். இனியாவது திட்டாமலிரு" என்று கூறினனும் இதைக் கேட்டதும் எல்லோரும் வெகு விந்தையென்று கூறி நகைத்தனர். அதிகாரி அந்த ஸ்திரீயைப் பார்த்து, "நீ இனிமேல் உன் புருஷனை அப்படித் திட்டாதே" என்று கூறி விடுதலை செய்தார். ஆனால் அந்த ஸ்திரீ தன் கணவனைத் திட்டுவதில்லை. பிறகு அவளுடைய புருஷன் அந்தச் சேவகனைக் கண்டால், என்னைப் பெருந் துன்பத்திலிருந்து விடுவித்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்" என்று சொல்லி வணங்குவ துண்டு.

உ

செநதிலாணடவன திருவடி துணை

# பாலவிநோதினி

அலலது

## குழந்தைகளின் அன்பன்

ஒரு மாதாநதப் பததிரிகை

தொகுதி 5 | 1923௵ அகடோபா௴ | பகுதி 10

### தெயவ வணககம்.

சோதியம வேதணட கனனிகைபா தககவுபி
  நயதுலய சோபவதன
துஙகதரி சூலதரி கஙகாளி சிவகாம
  சுநதரி பயநத நிரைசோ
ஆதிநடு மூதணடவணட பகிரணடஙகள
  யாவுங கொடுஞசிறகிறுல
அணையுநதனது பேடை அணடஙகளெனனவே
  அணைகருங கலாபமயிலாம
நீதிமறை யோதணட முபபததுமுககோடி
  நிததரும பாவு கிரியாம
நீலகிரி வேலவணிராலயப நிரபபயன
  நிரவியாகுலன சஙகுவான
மாதிகிரி கோதணடதணடந தரிததபுயன
  மாதவன முராரிதிருமால
மதுகயிடவாரி திருமருகன முருகன குமரன
  வாமுதவு வாகைமயிலே

**அருணகிரிநாதர் அருள் வாக்கு**

# ஹிதோபதேசம்.

1 பெரியோர்களுடைய கோபம் கெடுதி செய்வதில் எவ்வளவு பெரியதோ அவ்வளவு அவர்களுடைய தயவு நன்மை செய்வதிலே பெரியதாம்

2 ஸத்தியத்தைக் காப்பதனால் எவ்வளவு புண்ணியமுண்டாமோ அவ்வளவு புண்ணியம் வேறு எந்த நல்ல கர்மத்தினாலும் உண்டாகாது

3 சுற்றத்தினரும் நண்பினரும் பிறரும் ஒருவனை விட்டொழிவர், பிறவும் விட்டொழியும் ஆனால் ஒருவனை அவன் கற்ற கல்வி நீங்குவதில்லை இதனாலேதான் பெரியோர் கல்விச் செல்வத்தை நன்பொருள், விழுப்பொருள், கேடில் விழுச்செல்வம் எனக் கூறியிருக்கின்றனர்

4 பகைவன் தனக்கு அநுகூலமாயிருந்தாலும் அவனோடு சிநேகிக்கலாகாது தண்ணீர் வெந்நீரானாலும் நெருப்பை அவிக்குமன்றோ?

5. பிறர்மீது குற்றஞ் சொல்லாமல் எவன் தன் மனத்தையே சீர்திருத்திக் கொள்ளுகிறானோ அவன் புனிதவானாவது திண்ணம்.

6. எவ்வித எண்ணங்கள் ஒருவனுக்கு உதித்து வருகின்றனவோ அவ்விதமாகவே அவனுடைய வாழ்க்கை முடிவு பெறுகின்றது.

# திரௌபதி பாண்டவர் ஐவருக்கும் மனைவியானதேன் ?

முன்னாளிலே துவட்டா என்னும் ஒரு வேதியனிருந்தான். அவன் பண்டப் பவனாக இருந்தான். அவனுக்கு மூன்று தலையுடைய மகனொருவன் பிறந்தான். அவன் தவசியாக இருந்து தவம் செய்தான். இந்திரன் 'நமது பதவியை இவன் விரும்புகின்றான் போலிருக்கிறது. அதனாலேதான் இவ்வாறு இவன் தவஞ் செய்கிறான்' என்று சந்தேகங்கொண்டு அவனைக் கொன்றான்.

பிறகு பிரம்மஹத்தி பிடித்துக்கொண்டது. அவனிடமிருந்த பிரமவொளி தருமதேவதையை அடைந்தது. ஆகவே இந்திரன் ஒளியை இழந்தவனானான்.

தன்மகனை இந்திரன் கொன்றது துவட்டாவுக்குத் தெரிந்தது. அவன் கோபங்கொண்டு தன் சடையிலொன்றைப் பறித்து எடுத்துக்கொண்டு, "என்னுடைய வல்லமையைச் சகலதேவர்களும் பார்க்கட்டும். இந்த மூவுலகத்தவரும் பார்க்கட்டும். என் மைந்தனைக் கொன்ற கொடியவனாகிய அந்த இந்திரனும் பார்க்கட்டும்"— என்று கூறி அதை ஹோம அக்கினியிலே போட்டான்.

போட்டவுடன் அந்த ஹோம அக்கினியிலிருந்து

ஓா அசுரன தோனறினை. அவன ஒரு பெரிய அஞசன மலைபோலிருநதான, பெரிய பெரிய கோரபபறகளை யுடையவனுயப பாாககப பயஙகரமாகவுமிருநதான. அவ னுடைய அநத உடல நாளதோறும, ஒருவன எறிநத பாணம எவவளவுதூரம செலலுமோ அவ்வளவுதூரம வளாநதது

இவவாறு ஓா அசுரன வளாவதை அறிநத இநதிரன பயநது, அவனோடு சமாதானம செயது வைபபதறகாக சபதரிஷிகளை அவனிடம அனுபபினை சபதரிஷிகள அநத அசுரனிடமபோயத தககபடி பேசி அவனுககும இநதிரனுககும சமாதானஞ செயவிததாாகள இருவரும ஒருவாககொருவா கெடுதி செயவதிலலை யெனறு ஸத தியம செயதுகொணடாாகள.

அபபடி யிருககையில, இநதிரன காலம பாாத திருநது அநத ஸததியததைக கடநது அவவசுரனைக கொனறுன முன அடைநத பிரமஹததி தோஷததி னுல இநதிரன தன ஒளியிழநதானலலவா? இபபோது ஸததியஙகடநத குறறததிறகாக வலலமையை இழந தான அநத வலலமையானது வாயுவோடு கலநதது

முன ஒருசமயம இநதிரன கௌதம ரெனபவரு டைய மனைவியை அடையவிருமபினை. அதனுல அவன கௌதமருடைய சாபததிறகாளானுன அநதச சாபத தினுல அவனுடமபி லிருநத அழகு வெளிபபடடு அசு வினி தேவாிருவாிடமும போய்ச சோநதது

இநதிரன தருமம, ஒளி, வலலமை, வடிவு இவை இலலாதவனானதை அறிநத அசுராகள அவனை வெல வதறகு முயனறுாகள. அபபடியிருககையில அவாகள பூலோகததிலே அசுராகளாகப பிறநதாாகள; அதருமங களைச செய்யததலைபபடடாாகள.

அசுரர்களின் கொடுஞ்செய்கைகளைச் சகிக்கமாட்டாமல் பூமிதேவி தெய்வசபைக்குப் போய் அவர்கள் செய்யும் அக்கிரமங்களைக் கூறி முறையிட்டாள். தேவர்கள் துஷ்டர்களான அவ்வசுரர்களை ஒழிக்க மனம் கொண்டார்கள். உடனே அவர்கள் பூலோகத்தில் தங்கள் தங்கள் அம்சங்களோடு மனிதவர்க்கப் பிறப்பிறந்தார்கள். தருமதேவதை தன்னிடமிருந்த இந்திரனுடைய ஒளியைக் குந்தியினிடம் சேர்த்தது. அதனால் குந்தியினிடம் தருமராஜா பிறந்தார். வாயு தன்னிடமிருந்த இந்திரனுடைய வல்லமையைக் குந்தியினிடம் சேர்த்தான். அதனால் பீமசேனன் பிறந்தான். இந்திரனுடைய வீரியத்தினாலே அர்ச்சுனன் பிறந்தான். அசுவினி தேவர்கள் தம்மிடமிருந்த இந்திரனுடைய வடிவத்தைப் பாண்டுவின் மற்றொரு மனைவியாகிய மாத்திரியிடம் விட்டார்கள். அதனால் நகுல சகாதேவர்கள் பிறந்தார்கள்.

இவர்களுள் தருமராஜனே நிலத்தின் தத்துவக்கூறு. பீமன் வாயு தத்துவக்கூறு. அர்ச்சுனன் ஜலத்தின் கூறு. அக்கினியின் வடிவமுடைய நகுலன் தீயின் கூறு. சகாதேவனே ஆகாயத்தின் கூறு. இவ்வாறு இந்திரனுடைய பஞ்சபூதக்கூறும் பஞ்சபாண்டவர்களாகப் பிறக்க நேர்ந்தது.

பின் இந்திரனுடைய மனைவி சசிதேவியே வேள்வித் தீக்குழியினின்றுந் தோன்றித் துருபத ராஜனுடைய மகளென வளர்ந்து பாண்டவர்களின் பட்டமகிஷியானாள். ஆதலின் திரௌபதி பாண்டவர் ஐவருக்கும் மனைவியானது குற்றமுடையதன்று. இந்திரனொருவனே ஐவரானான். அவன் மனைவி சசி ஐவர்களாகப் பிரிந்து நின்ற இந்திரனை மகிழ்விக்கத் திரௌபதியாகத் தோன்றி அவ்வாறே மகிழ்வித்தாள்.

# பிரகலாத வெணபா

## காப்பு.

அகரம எழுததுமுதல ஆயதபோல ஆதி
பகவனபாாக குணமெனனும பானமை—திகழவரும
மெயயறிவின ஓாசிறுவன மேனமைசொல வானகுருகூா
ஐயறிவும வெனறுன அரண

## நூல்

மாதவஞ்செய தாஙகாரம வாயநதிறைவன தானேயென
றொதவஞச கஞசெய துலகமுறறும—சீதமுடன்
தனபோ வழஙகிவரச சாறறுவிததான ஒணபறையை
முனபோா இரணியமூாக கண. (1)

(அதனல்)

முனிவாசுரா முனனூல முறையிழநதாா உளளம
நனிவருநதி யேஆதி நாதன—பனிததாள
உறவத திலலாா ஒழிததாா முதுமை
மறவேல எனுநன மறை (2)

கறறபயன காணுா கனிநதவைசநது நிறபவெலாம
நறறவையின நலகியருள நாயகனுய—வெறறிக
கடலரவிற கணவளருங காரணனைச சோநதாா
திடவாமீந தான அவனுந தோநது (3)

(இவ்வாத்தின்படி இரணியனுக்கு)

கடவுளஉயிா பாசம கடைததேறும மாககம
திடவிசுபபி வறறினநிலை தோநது—புடவியொடு
வானவாழ மாமறையும வாழ அவதரிததான
தேனவாழ அலஙகலொரு சேய (4)

(அப்போது இரணியன்)

ஆனநதத தாழநதான அசுராகுரு வைககொண்டு
ஞானந தழைததன நனமகறகு—வானவரும
சேமமுறறு வாழததத திருபபிரக லாதனெனும்
நாமமிட்டுப போறறிவநதான நனகு. (5)

(வரும)

ம. இராஜகோபால பிள்ளை,
விதவான் - கோமளேசுவரனபேட்டை

# ஸ்ரீ ராமாவதாரம்

(204-ம் பக்கத் தொடர்ச்சி)

பரதாழ்வான் செய்தி இவ்வாறிருக்க, நாட்டைத் துறந்து காட்டுக்குப் புறப்பட்ட ஸ்ரீராமபிரானது வரலாற்றைக் கொஞ்சம் கவனிப்போம்.

சீதா லக்ஷ்மண சகிதமாகப் புறப்பட்ட இரகுநந்தனன் அயோத்திமாநகரத்தின் எல்லையைக் கடந்து வழியிற்றோன்றும் காட்சிகளின் விநோதங்களைப் பிராட்டிக்குக் காட்டியவாறே நடந்து வந்து புனிதத் தன்மை வாய்ந்த கங்கா நதியின் தீரத்தை யடைந்தனன். அங்கு தவவாழ்க்கையிலமர்ந்திருந்த மகரிஷிகள் இவர்கள் வரவை மிக்க அன்புடன் ஏற்று உபசரித்தனர். இவர்களும் அவர்களைப் பேரன்புடன் வணங்கி அவர்களுடைய அநுக்கிரகத்தைப் பெற்றனர். இவர்கள் வனம் வர நேர்ந்த சம்பவத்தை அறிந்து மகரிஷிகள் இவர்களைத் தேற்றினார்கள். இவ்வாறு இவர்கள் யதீஸ்வரர்களிடம் இருக்கும்போது இவர்களைக் குகன் கண்டான்.

குகனென்பவன் வேட ராஜன்; கணக்கற்ற நாவாய்களுக்கு அதிபதி; கங்காநதியின் தீரத்தில் சிருங்கிபேரபுரம் என்னும் ஊரையுடையவன். மகாதீரன்; திரண்ட சேனைகளைக் கொண்டவன். உத்தம குணங்களும் சற்கிரியைகளும் பொருந்தியவன். தெய்வநம்பகம் சிறக்கப்'

பெற்றவன் கங்கையைக் கடக்கவருவோரை நாவாய் மூல
மாக மறுகரை சேர்ப்பவன் இவன் ஸ்ரீராமபிரானைக்
கண்டதும் இவனுக்கு அப்பெருமான் விஷயத்தில் அன்பு
பெருகிற்று இப்படி அன்புண்டாவதற்கு யாதொரு
காரணமுங் காணோம் நிஷ்காரணமாக ஒருவருக்கு மற்
றொருவர் மீது சில சமயங்களில் அன்பு உதிப்பது சகஜம்
என்பதை நாம் அநுபவவாயிலாக அறிந்து வருகிறோம்.
தன்னைக் காண்போர் எத்தகையரா யிருந்தபோதிலும்
அவர்களை அப்போதே ரமிக்கச் செய்வதே இரவிகுலோத்
தமனான ஸ்ரீரகுநந்தனுக்கு இயற்கை யல்லவா? அதுவே
ஒருகால் குகனை மயக்கியிருந்தாலும் இருக்கலாம்

ஸ்ரீராமபிரானைக் கண்டதும் குகன் தன்னையும் மீறி
யெழுந்த அன்பினால் இருகண்களிலும் ஆனந்தவெள்ளம்
பொங்கித்ததும்ப ஓடிவந்து, அடியற்றமரம்போல நிலத்
தில் வீழ்ந்து, பணிந்தவண்ணம் இருந்தான் அப்போது
தசரதநயன் தன் தம்பியின் முகத்தைப் பார்த்தனன்
உடனே இலக்ஷ்மணன் குகனை யெழுப்பி "அப்பா!
நீயார்? உன்விருப்பம் யாது?" என்று வினவினன் இக்
கேள்விக்கு விடைபகரக் கூடாமல் குகன் கண்ணீரால்
தன் சரீரம் நனைய இருகைகளையுங் கூப்பிக் கொண்டு
சிறிதுநேரம் மௌனஞ் சாதித்தான் பிறகு ஒருவாறு
தேறி "சார்பற்றவர்க்குச் சமயத்தில் சார்பாயெழுந்
தருளிய தெய்வமே! அடியேன் வேடுவன்; ஏழை,
ஏதிலன், கீழ்மகன்; நிரக்ஷரகுக்ஷி; பேதையேன், ஆயி
னும் தங்களைக் கண்டமாத்திரத்தில் என்மனம் காந்தத்
தைக் கண்ட இரும்பாய் விட்டது; பிரிவதற்கு அணு
வும் இசையவில்லை இனி என்னை ஆதரிப்பது தங்களு
டைய பாரமே" என்று விம்மி விம்மி யழலானான்

இவ்வேடர் பூபதியின் அன்பை நோக்கிய ஸ்ரீராமபிரான் அவனைத் தங்களிடம் இருக்கப் பணித்து "தம்பி! இன்றுமுதல் எனக்கு நீ அத்யந்த நேசன், என் தம்பி இலக்ஷ்மணன் உனக்கும் தம்பி, என் பிரியை சீதை உன் கொழுந்தி, இது சத்தியமென்று நம்பக்கடவாய்" என்று சொல்லித் தங்களுக்கு அயோத்தியில் நேர்ந்த சமாசாரமுற்றும் அவனுக்கு இலக்ஷ்மணனைக் கொண்டு தெரிவித்தனன்.

மறுநாள் குகனை நாவாய் சித்தஞ் செய்யக் கட்டளையிட்டு, முனிவரிடம் விடை பெற்றுக்கொண்டு, கங்கையைக் கடக்கலாயினர். அப்போது ஸ்ரீராமபிரான் கங்கையின் பிரவாஹத்தைப் பிராட்டிக்கு அனந்த விதமாக எடுத்துரைத்தனன். மறுகரை சார்ந்ததும் தாசரதி குகனைப் பார்த்து "அன்ப! உன் நன்றி என்றும் மறக்கத்தக்கதன்று. நீ யுன்னிடம் போகக்கடவாய். நாங்கள் வனவாசங்கழித்துத் திரும்பும்போது உன்னைச் சந்திக்கிறோம். நீ மனத்தளர்வடைய வேண்டாம்" என்றனன். குகனும் இராகவனை விட்டு நீங்க இஷ்டமில்லாதவனாயினும் பெருமானது உத்தரவுக்குக் கீழ்ப்படிந்தவனாய் நீங்கலுற்றான்.

ஸ்ரீராமபிரான் காட்டின காட்சியையும் அவ்விடத்தில் திடசித்தத்துடன் தவமியற்றும் முனிவரின் பெருமையையும் பிராட்டிக்குத் தெரிவித்துக் கொண்டே பரத்துவாச மகரிஷியின் ஆசிரமத்தை யடைந்தனன். அங்கு அம்மகானால் உபசரிக்கப் பெற்று அவர் கூறியபடி சித்திரகூடப் பருவதத்தைச் சேர்ந்து இலக்ஷ்மணனால் இயற்றப்பட்ட பர்ணசாலையில் அனைவரும் தங்கியிருந்தனர்.

இஃதிவவாறிருகக, பநது மிததிரருடனும சேனு வெளளததுடனும தெக்ஷணதிசையை நோககி வநத பரதாழவானது செயகையைச சிறிது கவனிபபோம

இவவாறு புறபபடட பரதாழ்வான வழியிற் றனது அணணனாகிய ஸ்ரீ ராமபிரான தஙகிச சென்ற இடஙகளதோறும தானுநதஙகி, அவருணட காய கிழஙகுகளைத தானுமுணடு கஙகாநதியின தீரததை நோககிவநதனன கஙகையைக கடகக வருவோரை யொரு கரையினினறும மறறொரு கரைககுக கொணடு போயவிடும நாவாயகளுடன அஙகுகாததிருககும வேட பூபதியான குகன பெருஞசேனை சூழவரும பரதநமபி யைச சிறிது தூரததிற கணடபோதே கடுஙகோபங கொளளலானான "ஆம இதோ ஆடமபரததோடு வருபவன பரதனே இவன தனது தாயின துரபபோ தனைக குடபடடு என ஐயனை வனததிறகோடடி விடட தோடமையாது பினனுங கெடுதி செயய வெணணியே மகாதுணிகரததோடு வருகிறான ஐயோ! பாபம், நானொருவன மததியிலிருககிறே னெனபதை யறியான போலும 'அடே! பரதா! நானே வேடன உன தமயனாரது குறிதிசயம மெசசத தகுநதவனென்று நேரிற கணடேன அதுவும ஓரேநாள பழககததில

"புணாசசி பழகுதல வேணடா உணாசசிதான
நடபாங கிழமை தரும"

என்று உததரவேதம உதகோஷிககினறது அபபெருந தகையாளனுடன நீ பலநாள பழகியும அவனது காருண யததோடு கூடிய உதாரகுணததை யறியாமற போனாயே. சீ! சீ!!

"பலநாட பழகினும மூரககா கேணமை
நீாககுட பாசிபோல வோககொளளாதே"

எனனும நீதி வாககியததுககு நிதரிசனமாஞயே ஆறு
னும ஆழமறியாது காலிடடுக கொணட நீ எனனை மீறி
யனறோ அபபாற போகவேணடும வேடாவிடும சரம
வேநதா மீது பாயாதெனறு நமபி விடடாயோ! நீ
கொணடுவருமபடை யெலலாம எலிததிரள நானோ
அவறறை விழுஙககவலல அரவம எனபதைக கவனி"
என்று கையால தன மாரபைத தடடிககொணடே சிந
திததவனாயத தன சேனைகளை நோககி "அடா கிஙகரா
களே?" என்று ஒரு சததமிடடான உடனே "ஏன?"
எனகிற எதிரொலி பேரிடி யெயாநது விழுநததுபோற
கேடடது

"ஜாககிரதை! ஜாககிரதை!" அதோவருகிற பெரு
ஙகூடடததின மீது கணணோககமிருககடடும, குல
தருமததைக குபபுறக கவிழககுங கூடட மதுவே
அக கூடடததினின்று ஒரு துருமபும நமமைக கடநது
போகலாகாது நமமிடம சகோதரததுவம பாராடடிய
வாககனறோ நமமுயிரைத ததததை செயயவேணடுவது"
என்று தன படைககு உததரவிடடுக குகன பாரதாழ்
வாரனை உறறு நோககிநின்றுன

பரதனோ மாசடைநத மேனியனாய, மரவுரியுடுததது,
தெனறிசை நோககிக கூபபிய கையுடன துககக குறி
முகததில விளஙக வரும கோலமானது குகனுடைய கண
களுககுத தெனபடடது "எனன! பரதன இககோல
மாக வருகினறானே நாம அவன விஷயமாக நினைதத
தெலலாம தபபே. எமபெருமானுகிய ஸ்ரீராமபபிரபுவின

இரத்த சம்பந்தம் பெற்றவரும் பிழை செய்ய முன் வரு
வரோ? நானே எதிர் சென்று அவனைக்கண்டு தெளிகி
றேன்" என்று தனக்குள் எண்ணிக்கொண்டு பரதாழ்
வான் முன் விரைந்து சென்றான்.

குகன் தன் தமையனுக்குகந்த நேசன் என்று தெரி
ந்து கொண்ட பரதநம்பி அவனெதிரே முந்தினன். இரு
வரும் ஒருவரை யொருவர் நோக்கியதும் அவர்கள் கண்
களிலிருந்து நீரானது ஆறுபோல் பெருகியது. பேசநா
வெழாதவராய்த் தழுவிக் கொண்டனர். அப்போது,
தழுவிய வேடராஜனான குகன் தாமரைக்கண்களை
யுடையவனான பரதாழ்வானை நோக்கி "எழுவினும் உயர்
ந்த தோளாய்! நீ இவ்வளவு தூரம் நகரத்தைத் துறந்து
வந்த காரணம் யாது?" என்று வினவினன்.

பரதன் "ஐயனே எங்கள் தந்தையான சக்கரவர்த்
தியார் என் தாயாரிடம் வைத்த ஆசையினால் மதிமயக்
கங் கொண்டவராய் முறைகேடான ஏற்பாட்டுக்கு இடங்
கொடுத்தார். அதை நிவர்த்திசெய்து முறைப்படி அர
சனாக வேண்டிய என் தமையனை அழைத்துப் போகவே
வந்தேன்" என்றான்.

இவ்வார்த்தையைக் கேட்டதும் குகன்,

"தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணிதன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினை யென்ற போழ்திற் புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் ராமர் நின்கேழ் ஆவரோ தெரியி னம்மா"

என்று சொல்லிப் பரதாழ்வானை மார்புற இறுகக்கட்டிக்
கொண்டு கண்ணீரால் அவனை அபிஷேகஞ்செய்தான்.

பிறகு இவன் யார் என்று வினவிய பந்து வர்க்கத்
தினர் முதலாயினோர்க்குப் பரதன் குகனுடைய வரலாற்

றைக கூறினன அவாகள சநதோஷிதது அவனை ஆசீா வதிததாாகள.

பிறகு குகன பரதனையும அவனுடைய சேனை சமூகததையும படகிலேறறிக கொணடு கஙகையைக கடநது, ஸ்ரீராமபிரான தஙகியுள்ள இடததிறகுக கொணடு வநது விடடான

பரதனும ஸ்ரீராமபிரானும சநதிததனா ஸ்ரீராம பிரான அயோததியை விடடுப பிரிநதபின அஙகு நடநத சகலமும தெரிநது, தநதையின மரணததுககிரஙகி, பரதனுககுச சொலலவேணடிய புததிமதிகளைச சொலலி அயோததிககுப போய அரசாணடுவரத திடடஞ செய தனன பரதன அதறகு உடன படவிலலை கடைசியில ஸ்ரீராமபிரான பரதனுககுத தன பாதுகையை யளித தனன பரதன அபபாதுகைககுப படடஙகடடி, நந தியமபதியில தஙகித தவம பூணடிருநதான ஸ்ரீராமபி ரான அககணமே தெகஷிணதிசையை நோககிப புறப படடனன (வரும)

## ஆததிரககாரனுககுப புத்திமடடு

திருவாஙகூரில சவலைற யெனனும ஓா ஊரில ஒரு நாயா தனது மாடுவீறறு வைததிருநத நூறு ரூபாய நோடடை அவ னது மூனறு வயதுக குழநதை கிழிததுச சேதமாககி விடடது அது கணட தகபபன அதனைத தரையில அடிததுக கொனறு விடடான அதுகணடதாய தன கைககுழநதையுடன கிணற றில விழுநதாள அதனைக கணட நாயரும கிணறறில விழுந திறநதான

பணததை நாம சமபாதிககலாம நமமைப பணம சமபா திகக முடியாது பணம போயவிட்டதே எனகிற ஆததிரத திறகு இடஙகொடுததனால ஒரு குடுமபமே அழிய நோநத விப ரீதம காணக.

# மனித எண்ணத்தினும் தெய்வ எண்ணமே பெரிது

மாமல்லிகை என்றொரு மரமுண்டு. அது அளவற்ற புஷ்பங்களைப் பிரதி தினமும் புஷ்பிக்கின்றது. புஷ்பங்களோ பார்வைக்கு மிகவும் நேர்த்தியாகத் தோன்றுகின்றன. ஆனால் மணமில்லை. புஷ்பங்களும் பயன் படாமலே சிந்திவிடுகின்றன. அதுபோல மனிதவர்க்கத்திலுதித்த நமக்கும் பொதுப்பட எண்ணங்களாகிற புஷ்பங்கள் மலர்வதுண்டு. அப்புஷ்பங்களும் பெரிதும் பயன் படாமலே போய்விடுகின்றன. சிறிது பயன் படுவதும் நமக்கேற்பட்டுள்ள பகுத்தறிவின் விசேஷத்தாலேயாம்.

இவ்விஷயமாக நமது பெரியோர் சொல்லியவைகளையும் நாம் கவனித்தல் வேண்டும்.

ஔவையார்.

"உண்பது நாழி உடுப்பது நான்கு முழம் (ஆயினும்)
எண்பது கோடி நினைந்தெண்ணுவன (ஆதலால்) கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான்" என்றார்.

இது சத்தியமான பேச்சு என்பதை நாம் ஒவ்வொருவரும் அநுபவத்தில் கண்டு வருகிறோம். இவ்வசனத்

தை உறுதிப் படுத்தத் தாயுமானவரும்,

"எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி ஏழைநெஞ்சம்
புண்ணாகி விட்டதினிப் போதும் பராபரமே" என்றார்

திருத்தக்க தேவரும் "அவலம் பூத்து" என்றார். ஆங்கில கவிசிரோமணி யொருவர் "நமது எண்ணங்கள் அவ்வளவும் முற்றுப் பெறக்கூடுமாயின் இவ்வுலகம் இப்போதிருப்பதைவிடப் பலமடங்கு பெரிதாக வேண்டும்" என்று கூறியிருக்கின்றார்.

இந்த அபிப்பிராயங்கள், "நமக்கு இயல்பாக உதிக்கக் கூடிய பயனற்ற எண்ணங்களை அவ்வாறு [illegible] தியா திருத்தற்கான சாதனங்களை அப்பியசிக்கவேண்டும்; எல்லாம் பகவானுடைய எண்ணப்படியே நடைபெறும் என்கிற உறுதியை மேற்கொள்ளவேண்டும்;

"என் செயலாவ தியாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன் செயலேயென் றுணரப்பெற்றே னிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினையோ விங்ஙனே வந்து மூண்டதுவே"

"ஒன்றை நினைக்கில் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்"

"அவனன்றி யோரணுவும் அசையாது"

என்னும் மேலோருடைய உபதேசங்களைச் சிந்தித்தல் வேண்டும்" என்னும் முடிவை நமது ஞாபகத்தில் வேரூன்றச் செய்யும்.

"நாமொன்று நினைக்கத் தெய்வம் தானொன்று நினைக்கும்" என்பது பழமொழியன்றோ? இது சம்பந்த

மாக யாவருககும தெரிநத ஒரு சிறு கதையை இஙகு ஞாபகப படுததுகிறேன

## கதை

பலராமா தமது அருமைப புததிரியாகிய வதஸலையை மிகுநத செலவமுளள இடததில மணஞசெயவிகக வேணடுமெனறு விருமபினா அததகைய இடம அஸதினுபுரியே எனறுந தீரமானிததாா அஸதினுபுரியை ஆளபவன துரியோதன மகாராஜன அவன வணஙகா முடியுடையவன அவனிடததுளள சமபதது அளவுககு மிஞசியது. பிரபல வீரதீர ஞானவானகளாகிய பீஷமா, துரோணா, கிருபா, விதுரா முதலிய மேதாவிகளும அவனையே சூழநதிருநதனா பல பேசுவானேன? செலவததில அவனுககு ஒபபானவாகளாவது மேலானவாகளாவது இலலவே இலலை இபபடிபபடட மகாராஜனுடைய பிளளைககுத தமது பெணணைக கொடுததால எபபடிபபடட குறைவு மிராது எனறு பலராமா எணணினா

ஸ்ரீகிருஷண பரமாததுமாவுககுப பலராமருடைய இஷடததைப பூாததிசெயய மனமிலலை. சாபபததினிடம மாணிககமிருபபினும அதை எவா நேசிககத துணிவா? துஷடாிடம செலவமிருநதாலும அறிவுடையோா அவாகளைப பொருடபடுதத மாடடாாகள சுயபுததியு மினறி யொருவா சொலபுததியுங கேளாத பரமதுஷடனுகிய துரியோதனனுடைய சமபநதங கூடாதெனபது கிருஷண மூாததியின கருதது ஆகவே நறகுணமும நறசெயலும பொருநதிய பாணடவரையே வதஸலை உறவு பாராட்டவேண்டு மெனறு அவா இசசிததாா.

ஆகிலும தமது அண்ணருடைய மனைவை நேரே புண படுதத இணஙகாதவா போல நடிககலானா சாவஞஞரா கிய அவரால ஆகாத காரியம உணடோ? உடனே அவா வதஸலை இருநத இடததில ஒரு ராக்ஷஸனை வதஸலை யாககிவைததுவிடடு அவளை ஒருவருககும தெரியாமல அழைததுக கொணடுபோய அாசுனன மகனுகிய அபி மனயுவுககு அககினிசாக்ஷியாய மணமுடிததுவிடடாா

பிறகு பலராமா இஷடபபடி புதிய வதஸலையைத துரியன மகனை இலக்ஷமணனுககு விவாகம செய யுமபடி ஏறபாடு செயதாா இநத விவாகததைத நடதத சகுனியே முனனினருன அபபோது துரியோதனன தனது முழு சைனியததுடன தன மகன இலக்ஷ மணனை அலஙகரிததுக கொணடு துவாரகைககுப புறப படடான.

வழியில பகவானுடைய சஙகறபபபடி ஒரு தஙகு மிடம ஏறபடடது அது பாாபபவாகளைப பறிககத தககதாயிருநதது, எனறுங காணுத அறபுதப பொருள கள நிரமபப பெறறிருநதது, காணபோரது நிலைவிற ருனறும வஸதுசகளெலலாம நேரில விளஙகப பெறறு மிருநதது "இவவிடததில இஷடமுளளவாகள தங கள பழைய வஸதுககளைக கொடுததுவிடடு விலையேறப பெறற புதிய வஸதுககள எவையானுலும சரி, அவற றைப பெறறுக கொளளலாம" எனறு பெருதத எழுத தில எழுதபபடட பலகையொனறு தொஙகவிடடு மிருநதது

இபபடிககெலலாம தோனறுவது, நினைதத வுரு வெடுககவலல ராக்ஷஸாகளின வேலைபபாடு. அவாகள பக

வானுடைய கட்டளையை நிறைவேற்றக கடமைப் பட்ட வாகளலலவா ?

துவாரகைககுப புறபபடட துரியோதன மகாரா ஜன இநத அதிசயககாட்சியைப பாாததும பரமானநதங கொண்டு "ஹா ! நமது சமபநதி பலராமா நமமைக கௌரவப படுதத எனன ஏறபாடுகள செய்திருககிறுா" எனறு மெசசிக கொண்டான. உடனே அவவிடததில அவனுடைய சேனைகளும பநது மிததிராகளும ஒருவா மேல ஒருவா விழுநதபடி தஙகள தஙகள பழைய ஆடை யாப்ரணஙகளைக கொடுததுவிட்டுப புதிய ஆடையாபர ணஙகளைப பெறறுககொணடனா. அவைகளை வெகு சநதோஷததுடன அணிநது கொணடு துவாரகையை நெருஙகினா நெருஙகியதும இவாகள அணிநதிருநத துணிமணிகளெலலாம மாயமாயப பறநது போயின எல லோரும இபபோது கொலலாவிரதியாது கடவுளரின கூட டததை யொதது விளஙகிஞாகள.

பலராமா இவாகளுககுத தகக ஆதரணைசெயது விவாகச சடஙகை முடிததனா பிளளை வீடடாா மரு விட்டனா. துரியோதனன தன பெருமைககுத தககபடி தனது சைனியஙகளுககும பநது மிததிராகளுககும சம பநதி வீட்டாருககும திருபதியாகுமபடி பெரிய சமையல மணடபம ஒனறு அமைதது அதில பலவகையான பட்சண பலகாரஙகளுடன போஜனம தயாா செய்யவைததான. போஜனம தயாரானது கணட புதிய வதஸலை தன மாமி யிடஞ சென்று "அததையமமா ! எனககுப பசி யதிக மாயிருக்கிறது. எனனை சமையலறைககு அனுபபுங கள். எனககிஷ்டமானதை நானே உண்டு வருகிறேன.

ஒருவா பரிமாற உணபது எனககு வெடகமாயிருக
கிறது" என்று கைளபபுமேலிடடவளபோல சொல
லிஞள. மாமியும தன மருமகள கூசசமினறித தன
னிடம அனபுடன வநது பேசுவதறகு ஆனநத முறறு
மடபபளளிககுத தன மருமகளை யழைததுககொணடு
போய அஙகிருநதவாகளை யெலலாம வெளியே அனுபபி
விடடு "அமமா குழநதாய! நீ கூசசபபடாமல உனக
கிஷடமானபடி யுணடுவா" என்று சொலலித தானும
அபபுறம போஞள

குழநதை வததலை அநதப பெரிய மடபபளளியில
நுழைநததும, கதவைத தாளிடடுக கொணடு கணககறற
போகஙகளுககுச செயது வைததிருநத படசண பலகாரங
கள அவவளவையும ஒரே வாயாக உடகொணடு, பீபபாய
களில நிறைதது வைததிருநத ஜலமுழுதும பானஞ
செயது விடடுப பெரிய ஏபபமிடடுககொணடு வெளியே
வநதாள. இதைக கணட தூரியோதனனுடியாககுப
பயம மேலிடடு விடடது உடனே ஒருவருடனும
சொலலாமல வநத வழியை நோககி ஓடடம பிடிததார
கள இதஞல தேயவ எணணமே பெரிது எனபதை
நாம தெரிநது கொணடோம ஆகையால வீண எண
ணஙகளுககு நாம இடநதராமல கடவுள எணணபபடியே
யாவும நடை பெறுமெனறு நமபி அவா விஷயததில
விசுவாசததை வைதது ஒருவருககும தீஙகு நாடாமல
நடபபோமாக சுபம.

ம இராஜகோபால பிள்ளை,
வித்வான், கோமளேசுவரன் பேட்டை, சென்னை.

இறங்கவில்லை. யாரேனும் ஸ்டேஷனில் வேலை செய்யும் போர்ட்டர்களில் ஊருக்குச் செல்லுகின்றவர்கள் உண்டா என்று விசாரித்ததில் போகவேண்டிய பிருவர் மாலை ஆறுமணிக்கே போய் விட்டனரென்று தெரிந்தது. ஆதலால் அவன் என்ன செய்வது? எவ்வாறு தனித்துச் செல்வது? என்றெண்ணி, ஸ்டேஷன் மாஸ்டரிடம் சென்று செய்தியைச் சொல்லி இரவு தங்குவதற்குச் சௌகரியமான இடந்தரவேண்டுமென்று கேட்டான். அவர் மனமுவந்து "எவ்விஷயத்திற்கும் ஆலோசிக்க வேண்டியதில்லை யென்றும், தமது வீட்டிலேயே தங்குவதற்கு இடமளிக்கப்படு மென்றும், பணத்தைப் பற்றிய கவலை அணுவும் வைக்கவேண்டா மென்றும், கூறினார். பிறகு சுந்தரன் அங்குத் தங்குவதாக நிச்சயித்துச் சாப்பாட்டை முடித்துக் கொண்டுவந்து அவருடன் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்து, பிறகு விடியற்காலம் நாலரை மணி சுமாருக்குத் தன்னை எழுப்பி விடும்படி சொல்லி விட்டுப் படுக்கப் போய்விட்டான்.

சுந்தரன், தனித்த ஒரு விடுதியிற் சென்று படுத்துச் சுகமாக நித்திரை போனான். ஸ்டேஷன் மாஸ்டரும் தம் படுக்கை அறைக்குச் சென்றார். அங்கு அவருக்குச் சரியாக உறக்கம் பிடிக்கவில்லை. மனத்தினிடமாக பலவிதமான எண்ணங்கள் முளைத்தெழுந்தன. அவர் பின்வருமாறு தமது நிலைமையைப்பற்றி ஆலோசிக்கலானார் —

பதினைந்து வருடங்களாக நான் இந்த ஸ்டேஷன்மாஸ்டர் உத்தியோகத்தில் அதி சிரமத்துடன் உழைத்து வருகின்றேன். மாதம் இருபது ரூபாய் சம்பளம் வந்தும் ஏதும் பயனின்றிச் செலவழிந்து விடுகின்றது.

ஆவியை ஒடுக்கி இதுநாள் பரியந்தம் சேமித்த தெல்
லாம் கூடி கேவலம் ஐந்நூறு ரூபாய்களே. எனது
பெரிய பெண்ணிற்குப் பதினமூன்றும் வயது நிரம்பப்
போகின்றது. இளையவளுக்கோ பதினொன்று நிறைந்து
விட்டது. பிள்ளைகளையோ படிப்பிக்கப் பள்ளிக்கு அனு
ப்பவேண்டும். இரண்டு குழந்தைகளுக்கும் ஒரு முகூ
ர்த்தத்தில், கல்யாணத்தை நடத்தினால் தான் சிறிது
காலத்திற்காவது நம்மதிப்போடு நிம்மதியாக இருக்க
லாம். சற்றும் ஓய்வின்றி இன்னும் பதினைந்து வருடங்
கள் முற்றும் வரை உழைத்தாலன்றோ மற்றொரு ஐந்
நூறு ரூபாய்கள் சேர்க்கலாகும். இந்தப் பெண்கள் கலி
யாணத்தை அந்தக் காலம் வரை நிறுத்தி வைக்கமுடி
யுமா? "சிந்தனையின்றி மேலைக்கருத்த தாலிகட்டுகின்றேன்
கழுத்தே சுகமாயிரு" என்னும் விந்தை மொழி நம்போ
ன்றவர்களின் பொருட்டே ஏற்பட்டதுபோலும். இக்
கலிகாலத்தில் நியாயத்தையும் சத்தியத்தையும் அனு
சரித்து நடந்தால் இக்கட்டில் சிக்குவதன்றிச் சில மூடர்
கள் கூறுவதுபோல் நல்மான வழிகளில் சம்பாதித்து
மேனிலையடையலா மென்பது வீண்பேச்சே. சூதும்
வாதும் செய்து ஏதேனும் பணம் சேர்த்தால் தானுண்டு.
தானாக வரும் ஸ்ரீதேவியை காலால் உதைத்துத் தள்ளு
வாருமுண்டோ? ஆகவே இச்சமயத்தைக் கைநழுவ
விடாமற் படிக்கு இங்குவந்துபடுத்திருப்பவன் கொண்டு
வந்திருக்கும் பணம் அவ்வளவையும் நம்முடைய வசஞ்
செய்துவிட்டால், செம்மையாக இருக்கும் என்று கெடு
மதிக்குத் தக்கவாறு முடிவு செய்து கொண்டார்.

சிந்தனை பலப்பட்டது. துணிந்து சதி செய்து

தன கருமததை அதிவிரைவில முடிகக வேணடுமெனறு நினைததார். எவ்வாறு அதைச செயது முடிபபதெனப பதைப பறறிச செவவையாக ஆலோசிததார். கெட்ட விஷயஙகளுககுத தகக யோசனைகள சட்டெனறு உதிப பது வழககமலலவா? அதுபோலவே அவர மனததிற குப பளிசசெனறு ஒரு சூழசசி தெனபடடது. உடனே படுககையை விடடுச சடககெனறு எழுநதிருநது உததரீ யததை மேலே போட்டுககொணடு மெததெனத நடநது ஓசைபபடாது கதவைததிறநது கொணடு வெளியில வநது மாசினறித திகழும நிலவில ஸடேஷனுககுத தெற குக காலமையில தூரததில வசிககும குறவர்களின குடி சையைக குறிககொணடு நடநதார

குடிசைககுச சமீபமாகக குறுகினவுடன கும்பிட பபோன தெயவம குறுககே வநதது போலவும தேடப போன செடி காலிறசுறறிககொணடது போலவும தாம நாடிவநத, காடனும மாடனும வேணடியவரைகளளை மிகுதியும குடிதது வெறியுடன உடகாரநது உரையாடிக கொணடிருபபதைக கணணுறறார ஸ்டேஷனமாஸட ரைச சநதிததவுடன அவவிருவரும எழுநதிருநது கை கட்டி நினறு, 'ஸவாமி ! புததி !' எனறாரகள.

அதறகு ஸ்டேஷன மாஸடர், 'அடே ! ஒரு பெருதத வேடடை அகபபடடு இருககினறது ! நீஙகள இருவரும கொஞசம துணிகரமாய வேலை செயவீர களானால வெகு சுலபததில உஙகளுககுத தலைககு நூறு நூறு ரூபாய கிடைககும என்ன சொலலுகிறீர்கள் ?" எனறு கேடடார். அதறகவர்கள், 'எஜமானே, உததர வானால எநதவேலையானாலும நிஜமாகசசெயது முடிக

துப் போடுகிறோம். ஊம்'—என்று ஊதிப்போடுகி றோம். சுவாமி' சொல்ல வேண்டியதைச் சீக்கிரம் சொன்னால் சரிங்க' என்று வணங்கி நின்றார்கள்

உடனே ஸ்டேஷன் மாஸ்டர் நம்வீட்டில் ஓர் ஆள் வந்து தங்கியிருக்கின்றான். அவனிடம் மூவாயிரம் ரூபாய் கொண்ட முடிப் பொன்றிருக்கிறது அவனை எப்படியாவது சமாதானப்படுத்தி ஒரு மணி சுமா ருக்கு ஊத்துக்குளிக்குப் பணத்துடன் சேர்த்து அனுப் புகின்றேன் நடுவழியில் நீங்கள் ஒரு பெரிய மரத்தின் மறைவில் படுகுழி தோண்டி வைத்துக் கொண்டிருந்து அவன் வந்தவுடன் சவமாம்படி ஒரே வெட்டில் அவனை இருதுண்டாக்கி அவன் மேற்புறமாக இடுப்பில் கட்டி யிருக்கும் தோற்பையை யவிழ்த்துக் கொண்டபின், சவத்தைப் படுகுழியில் வீழ்த்திச் சமயமில்லாதபடி ஆழப்புதைத்துவிட்டு வந்து சேருங்கள் தெரிந்ததா சங்கதி? ஜாக்கிரதை' சொன்னசம் விஷயம் வெளியானு லும் நாம் ஒருவரும் பிழைசமாட்டோம் தொலைக்க முடி யாத தீங்கு தலைக்கே வந்து சேரும் உஷாராக நடந்து கொள்ளுங்கள் எச்சரிக்கை' எச்சரிக்கை!" என்று சொல்லி அவர்களை அனுப்பிவைத்தபின், தம் மனத் தெண்ணம் ஈடேறியதாக நினைத்துக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்தார்

அக் குறவர்களும் அவ்வாறே, ஆயுதங்களுடன் சென்று அங்குள்ள ஓர் ஆலமரத்தின் மறைவில் ஆழ மான குழியொன்றைத் தோண்டி வைத்துவிட்டுச் சுந் தரன் வரவை யெதிர்பார்த்தவர்களாய்ப் பதி விருந் தனர்.

இரவு ஒரு மணிககு ஸ்டேஷனமாஸ்டா அங குளள பெரிய கடியாரததைச சரியாக ஐநது மணியாகத திருபபிவைததுவிடடுச சுநதரனபடுததிருநத அறையண டை வநது, 'ஐயா ! கோபிரகுப போகிற ஐயா !" என்று உரதத குரலில கூவிக கதவையும நாலைநது முறை பல மாகததடடினா அவன அவசரமாககக கணவிழிதது எழுநது கதவைத திறநதான அபபொழுதவா "நாலரை மணிககு எழுபபுமபடி சொனனீாகள அயாநது உறஙகி விடடீாகள இபபொழுது மணி ஐநது அடிககப போகிறது தஙகாது புறபபடுஙகள" என்று சொன னா அவா சொலலிவாய முடிமுன 'டிங, டாங, டிங, டாங, டிங, என்று அஙகிருநத கடியாரததில கணீ ரெ னறு மணி ஐநதடிததது

உடனே சுநதரன தன வாலையை யெடுதது மடி யிற கட டிககொண்டு அவா தனபிறகுப பெரிதும வந தனமளிதது அதயநத உபசரிபபுடன அவரிடம பிரியா விடை பெறறுக கொண்டு மிகவும விரைவாக ஊறதுக குளியை நோககிப போனான

இனறைககுப பௌரணமை தினமாகையால முழு மதி படடப்பகற்போற பிரகாசிததுக கொணடிருந தது புறபபடட வேகததில சரியாகப பாதி வழிககு வநது சேரநதிருபபான அசசமயம அவனுககு மனத தில பீதி தோனறிறறு மாாபு படபடவென அடித துக கொணடது மேல நடககக காலகள பினனுககு இழுததன கொலைககளததிறகு வலிததுச செலவது போனற ஓா உணாசசி அவன மனததினிடமாக உண டாயிறறு என்ன இது ! விணபயம ! மடியில கனமிருந தால வழியில அசசம தோனறும போலும ! சீ ! சீ ! இது கெட்டது ! காணமினறி விணகலவரததிறகு இடநதரலாகாது ! என்று திடபபடுததிக கொண்டு

மறறும கொஞசதூரம சென்றுன அகம மிகவுங குழ
மபிப போயிறறு பயம அவனைப பாதிததது ஏதே
னும இது சூதாயிருககுமோ என்று எண்ணி ஆகாய
ததைத அணணுநது நோககினுன சநதிரன நடுமையத
தைக கடநது கொஞச தூரமே வநதிருநதான மணி
ஒன்றரை அலலது இரணடிறகு மேலிராது என்று
கணிததான அசைவினறி நிசபதம குடி கொணடிருந
தது வஞசனையே யிது என்று விளஙகியது மெய
நடுஙகவும, காலகள உதறல எடுககவும ஆரமபிததன.
பசபசவென்று செயவதறியாது இவன விழிககும அசச
மயததில யாரோஇருவா அதிக தூரததில "கசுகுசு"
என்று பேசுவது அவன காதிறபடடது. அஞசியநெஞ
சுடனிருககும அவனுககுக கொஞசதூரததில களளிககு
நடுவில ஆலமரததின மறைவிலிருநது வெளளையாடை
யொன்று வெளியில பறநது மறைநதது. இவைகளைக
கண்டவுடன அவனுககு சடடெனத தேகமெலலாம
வெயாததது அவன மனம இடிநது போயிறறு அவன
அவவிடததிலேயே உடகாாநது மெளள, மெளளக கஷ்ட
பபடடுத தளளாடிக கொணடே சென்று அருகிலிருநத
ஓா வேபபமரததினமீது சிரமபபடடு ஒருவாறு ஏறிக
கொணடான ஆஙகிருநது ஆலமரததின பாஙகில நோககி
னுன ஆ! ஆ! அவவிடததில ஒருபால ஒரு பெரும
பளளம தோணடபபடடிருநதது அதையடுததுக கையி
றகததியுடன இருவா பாாததவா மனம பதைபபுறும
வணணம வீறறிருநதனா. இவைகளைக கணட அவன
நெஞசு வாதனைககுளளாயிறறு.

அமமரததினிடமாக உயாநது, செமமையாகப படி
நதது, பாதையின குறுககே போயிருநத, கிளையோடு கிளை
யாயப படுததுக கொணடு, அவன உததிரீயததைக கிழி
தது, கிளையோடு சோததுக கனமாக மூன்றுகடடுகள
கடடி விடடு, இஙகேதான இவவித பிருபபதை எஙகே
எவரேனும கணடு கொணடு விடுவாாகளோ என்னும
காரணததினுல நடுஙகி, கைகளாற கிளையை கெடடியாகப

பறறியவண்ணம, தனது இஷ்டதேவதையாகிய முரு கனை, "கநதா ! குமரா ! முருகா ! ஆபதபாநதவா ! அநா தாரக்ஷகா ! ஆறுமுகவடிவேலவனே ! பகதாக கிரஙகும பரமகருணாநிதே ! பாலசுபபிரமணயா ! இவவேழையை இபபெரிய ஆபததிலிருநதும மறறும நேரிடககூடிய எவவிதத துனபஙகளிலிருநதும காததது, தீ நெறி விலககி நனனெறி செலுததி இரக்ஷிபபது உன பொறுபபு ! அப பனே !" எனறு மனததில தியானிததிருநதான அப பொழுது காடனும, மாடனும, பேசிய பேசசுகள செவ வையாய் அவன செவியிற படடன.

காடன் —"அடே ! மாடா ! எனனடா இது ! இன னும அநத ஆசாமி வரவே இலலையே ! இநதப பாளாப போன ஸடேஷன மாஸடா ஏதாவது சூது கீது பணணி யிருபபானோ ! எனனவோ தெரியலலையா நமமை இங கே இபபடி இருககச சொலலிபோடடு எஙகேயும போலீசியாரைக கூடடியாநது இவுஙகோ யாரையோ கொலலடணரததுககுக காததிருககாஙகோ பாருஙகோ இனனு சொலலி புடிசசுககுடுததுடடா எனடாபணரது எனககெனனவோ பயமாததானிருககுது இது எபபடி முடியுமோ தெரியலேடா ஆணடவன நலலவழி விடோ ணுமடா ! மணி இரணடுககுமேலே ஆகைப போய தேடா எனககெனமோ நலலாயிலலேலே போல தோணுது மனசு ! சுமமா ஏனோ கலவரபபடுது"

மாடன —"சநதேகமிலலாமே நீ எநதநா வாநத நாளு நெனசசதுககெலலா உனககுச சநதேகநதா. சரிதா. இருககடடு இதுககு முனனாடி எபபவாவது இவா இபபடி செஞசதுணடா ? அவருககு நமககுமெனன விரோதமா ? ஒணணுமிலலையே ? அபபடி யெலலாமிருக காது அநத ஆசாமியே சநதேகமிலலாமல அனுப்பிக கொடுககவேணுமா ? அதறகுக கொஞசம நேரநதானுககும நீ சுதத பைததிககாரனடா. ரொமப கடநது அவசரப படறயே. இநத விசயஙகளுககெலலாம எததனை சாக கிரதையா யிருககவேணும தெரியுமா ? கொஞசஙகூட

யோசனையே இல்லாமல் பேடிப்பசங்களைப் போல என்னென்னமோ பேத்தராயா? உன் வழக்கமே இப்படித்தா

காடன் —"நீ சொல்றதெல்லாம் சரிதான் மெய்யே! என்னமோ என் மனசுக்குத் தோணியதைத்தான் சொன்னேன். கொஞ்சம் பயம் தோணுத்தா செய்யிறது ரொம்ப நேரமாய்ப் போயிடுத்தேன்னு சொன்னேன். வேறொண்ணுமில்லே! நீ கோவிச்சுக்காதே நானும் இனிமே உன்னைப் போல பொறுமையாயிருக்கேன்" என்று சொன்னான்.

உடனே இருவரும் திடமனதுடையவர்களாய், நேராக நிமிர்ந்து உட்கார்ந்து வழிமேல் விழிவைத்து இமை கொட்டாது கவனித்துக் கொண்டிருந்தனர்

ஸ்டேஷன் மாஸ்டர் சுந்தரனை வஞ்சனையாக அனுப்பிவைத்த பின் தாம் தமது சயனத்திற் சென்று சயனித்தார் தூக்கம் வர இல்லை கடியாரத்தை அடிக்கடி எடுத்துப் பார்த்தார், மணி இரண்டும் ஆயிற்று, மூன்றும் ஆயிற்று; காடனும், மாடனும் நாடகக்காரனும் சந்தேகம் அவருக்குச் சனித்தது ஜயம் பெறுவோம் என்னும் எண்ணம் போய் பயம் அதிகரித்தது ஆசாமிகள் இருவரும் தம்மை மோசம் செய்து விட்டனரோ என்றும் எண்ணினார். சென்றவன் சரியாகப் போய்ச் சேர்ந்தானோ? அல்லது சேராதொழிந்தானோ என்று ஐயுற்றார் வரவர அவருக்குக் கலவரம் அதிகமாயிற்று 'டிங், டாங், என்று மணி நாலரையாயிற்று அதற்குமேல் அவரால் பொறுக்க முடியவில்லை எதற்கும் போய் நேரில் பார்த்துவிட்டு வந்து விடுவதென்று தீர்மானித்தார் அந்த க்ஷணமே மேலாடையுமின்றி ஊத்துக்குளியை நோக்கிவந்தார்

அவர் சற்றுதூரத்தில் ஸ்டேஷன், மாஸ்டர் அவசரமாக வந்துகொண்டிருப்பதைச் சுந்தரன் கண்ணுற்றான். அவனுக்குமிகுந்த மனக்கிலேசம் உண்டாயிற்று. எங்கே தன்னைக் கண்டு பிடித்து விடுவார்களோ வென்று எண்ணி நெஞ்சம் புண்ணுற்றான். (வரும்)

# Presence of mind IV

## சமயோசிதமான யுக்தி 4

ஒரு குழந்தை இரண்டு சலங்கைகளை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தது. அவைகளில் ஒன்றை விழுங்கிவிட்டு அது கத்தியது. அதன் பக்கத்தி லிருந்த அக்குழந்தையின் தகப்பனார் திடுக்கிட்டு வெகு பரபரப்புடன் குழந்தையை எடுத்துக்கொண்டு டாக்டரிடம் ஓடினார். டாக்டர் சலங்கை வெளியே வருவதற்குக் குழந்தைக்குப் பேதிக்குக் கொடுத்து அவரை அனுப்பி விட்டார்.

தகப்பனார் ரசாயன சாஸ்திரத்தில் தேர்ந்த பீ. ஏ. டாக்டர் பேதிக்குக் கொடுத்தும் குழந்தையின் கதி யாதாகுமோ வென்ற திகில் அவர் மனத்தைவிட்டு அகலவில்லை. மனப்பீதியுடன் வீட்டுக்குவந்தார். அவர் வீட்டையடைந்தும் அவ்விடங்களில் நடக்கும் புதுமை காணப் போயிருந்த *நான் "ஏனையா சாஸ்திரி யாரே, எங்கே அவ்வளவு வேகமாகச் சென்றீர்?" என்று கேட்டேன். சாஸ்திரியார் பதைபதைத்த மனதுடன் "குழந்தை சலங்கையை விழுங்கி விட்டது. டாக்டரிடம் சென்றிருந்தேன். இதோ பாருங்கள் குழந்தையின் வயிற்றிலிருக்கும் சலங்கை ஆடுகிற சத்தம் கேட்கிறது" என்று குழந்தையைக் கையில் பிடித்துக்கொண்டு ஆட்டிக்காட்டினார்.

* பாலவினோதினி

இதைப பாாததான குழநதை வயிறறிலிருககும சலஙகை ஆடவாவது வெளியில சததம கேடகவாவது எனறு ஆசசரியபபடடு மறுமுறை குழநதையை ஆடடுமபடி சொலலி உறறுககேடடேன சபதம பலமாககேட டது. ஆசசரியம மேலிடடவளாயக குழநதையையும தகபபனாையும உறறு நோககினேன சாஸதிரியாா ஒரு கையை மூடிககொணடிருநதாா ஒருசமயம சல ஙகை இவா கையிலிருநதாலும இருககலாம எனறு நினை ததுக கையைத திறககுமபடி சொனனேன திறநதவுடன சலஙகை சொடடெனறு கீழேவிழுநதது நானும மறறு முளளவாகளும கொலலெனறு சிரிததோம

சாஸதிரியாா தன கையிலிருநத சலஙகை ஆடிய தால கலவரபபடடுத தாம ரசாயன சாஸதிரததில தோ சசியடைநதவரா யிருநதும வயிறறில சலஙகை இருநதா லும அது ஆடும சபதம வெளியே எபபடிக கேடகும எனபது மனதிற படாமல வயிறறுச சலஙகை ஆடு கிறது எனறு அவா திகில அடைநதாா இது சமயோ சிதமாகப புததியை நிதானபபடுததிக கொளளாததின விபரீதம எநத ஆபததிலும நிதானம வேணடுமென பதை உணாவீாகளாக!

பாலவிநோதினி

குறிபபு சமயோசிதமான யுகதி எனற தலைபபின கீழ மூனறு விஷயஙகள் சென்ற வருஷததுப பால விநோதினியில வெளிவநதுளளன.

# திருக்குறள்

## 4-ம் அதிகாரம்—அறன்வலியுறுத்தல்

மூலமும் கருத்துரையும்.

(1) சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு

(1) மக்களுக்குத் தருமத்தைவிட மேலானது ஒன்றுமில்லை

(2) அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

(2) தருமத்தைவிட மேலான செல்வமுமில்லை அதை மறப்பதைவிட மேலான கேடுமில்லை.

(3) ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லுமவா யெல்லாஞ் செயல்

(3) மனம் வாக்கு, காயம் என்னும் இம் மூன்றாலும் தருமம் செய்யக்கடவார்கள்.

( ) மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற

(4). தருமஞ் செய்பவன் வஞ்சகமில்லாத மனமுடையவனாய் அதாவது பரிசுத்த மனமுடையவனா யிருக்கவேண்டும் அதுவே தருமமாம்.

(5) அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

(5) பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய இந்நான்கையும் விட்டு நடப்பதே தருமமாம்.

(6) அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை

(6) இறக்கும்போது தருமஞ் செய்வோமென்று எண்ணாமல் உயிரோடிருக்கும்போதே தருமஞ் செய்க. அந்தத் தருமம் இறக்கும்போது உங்களுக்கு உதவியாகும்.

(7) அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை

(7) தருமத்தின் பயனைப் பல்லக்குச் சுமப்பவனிடமும் பல்லக்கில் ஏறுபவனிடமும் காணலாம்.

(8) வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்

(8) எவனொருவன் தருமத்தைச் செய்கிறானோ அவனை அந்தத் தருமம் பிறவி யென்னுந் துன்பத்திலிருந்து நீக்கும்.

(9) அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில

(9). இல்லறத்திலுண்டாகு மின்பமே இன்பம். அப்படியில்லாமல் மற்றைய வழியில் வரும் இன்பமெல்லாம் இன்பம்போலத் தோன்றினாலும் துன்பத்திலே சேர்ந்தனவாம்.

(10) செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி

(10). செய்யத் தக்கது நல்ல செய்கை; செய்யத் தகாதது தீய செய்கை.